# பரம்பரை மருத்துவம்

## பாகம் - III

(முறிவு நெரிவு மருத்துவம்)

## *TRADITIONAL MEDICINE PART-III*
## *(FRACTURE MEDICINE)*

ஆயுர்வேத மருத்துவ சபையில்
வைத்தியர்களாக பதிவு செய்வதற்கும்,
சித்த மருத்துவ மாணவர்களுக்கும்
பரம்பரை மருத்துவ அறிவை வளர்ப்பதற்கும்
வழிகாட்டும் நூலாகும்.

வைத்தியகலாநிதி
**கணேஷ் ஸ்ரீதரன்**

யாழ்ப்பாணம்
2010.

# பரம்பரை மருத்துவம்

## பாகம் – III

## (முறிவுநெரிவு மருத்துவம்)

# Traditional Medicine Part - III

## *(Fracture Medicine)*

*ஆயுர்வேத மருத்துவ சபையில் வைத்தியர்களாக*
*பதிவு செய்வதற்கும்,*
*சித்த மருத்துவ மாணவர்களுக்கும்*
*பரம்பரை மருத்துவ அறிவை வளர்ப்பதற்கும்*
*வழிகாட்டும் நூலாகும்.*

வைத்திய கலாநிதி
**கணேஷ். ஸ்ரீதரன்**
**B.S.M.S (SL), M.Phil (Jaffna)**
பரம்பரை மருத்துவர்

*ISBN: 978-955-52588-3-8*

**2010**

நூல் :- பரம்பரை மருத்துவம்

ஆசிரியர் :- வைத்தியகலாநிதி. கணேஷ் ஸ்ரீதரன்

முகவரி :- 58 கே. கே. எஸ் வீதி, கொககுவில்.

பதிப்பு :- நான்காம் பதிப்பு

பிரதிகள் : 200



அச்சுப்பதிப்பு :- ஸ்ரீ சாயி பிறிண்டேர்ஸ்,
1227 கே.கே.எஸ் வீதி,
யாழ்ப்பாணம்.

விலை : 400.00

பதிவிலக்கம் : ***ISBN: 978-955-52588-3-8***

# பொருளடக்கம்

# ஆசியுரை

வைத்தியக்கலாநிதி கணேஷ் ஸ்ரீதரன் அவர்களால் எழுதப்பட்ட பரம்பரை மருத்துவம் பாகம் - III எனும் நூல் இவரின் 4வது நூலாகும். இவர் 2வது பரம்பரையைச் சார்ந்த குடும்பத்திலிருந்து இந்நூலை வெளியிடுவது மிக வரவேற்பை அளிக்கும் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. அதுமட்டுமல்லாமல் தனது பட்டமேற்படிப்பையும் யாழ்ப்பாணத்திலேயே பரிபூரணமாக முடித்துள்ளார். கல்வி கற்கும் காலங்களிலும் சித்தம.ருத்துவம் சார்ந்த பாடங்களில் மிக. ஆவலுடன் கற்றமையும் என்னால் உணரமுடிகின்றது. இவ்வகையில் முறிவு நெரிவு எனும் நூலை எழுதியுள்ளார். இந்நூல் முழுக்க முழுக்க சித்தமருத்துவ.முறையில் எழுதி இருப்பதும், ஆங்காங்கே எலும்புகளில் ஏற்படும் பிணிகள், முறிவுகள், அதன் வைத்திய பராமரிப்பு முறைகள் பற்றி எழுதி இருப்பதும் வரவேற்கத்தக்கது. அத்துடன் இந்நூல் சித்தமருத்துவ மாணவர்கட்கும். பரம்பரை வைத்தியர்கள், ஆயுர்வேத மருத்துவசபையில் வைத்தியர்களாக பதிவு செய்பவர்கட்கும் மிகவும் பயன்படும் ஒன்றாகும். இன்னும் பல அரிய நூல்களை வெளியிட வேண்டும் என்றும், மக்கள் அதனால் பயன்பெறவேண்டும் என்றும், அவரைப் பாராட்டுவதுடன் இறைவனை பிரார்த்திக்கின்றேன்.

Dr. (Mrs.) Thilageswary Kumutharanjan
M.D (S)(Maruthuvam),DAMS (Hons)
M.Ac. F. (Cey)(Intevnational)
Head / Siddaa -Medicine,

## என்னுரை

சித்த மருத்துவம் யாழ்ப்பாணத்தில் இன்றும் சிறப்பாகக் கையாளப்பட்டுக் கொண்டு வரப்படுகிறது. சித்த மருத்துவத்திலே பரம்பரை மருத்துவர்கள் முறிவுநெரிவு வைத்தியம், கட்டுவைத்தியம், விஷவைத்தியம், சர்மரோகம், மானசீகரோகம், வாதவைத்தியம், குழந்தை வைத்தியம், கண்வைத்தியம், பொதுமருத்துவம் என பல்வேறு துறைகளில் தமது பரம்பரை வழியாகக் கற்றவற்றை தொடர்ந்து செய்து வருகிறார்கள். இம்மருத்துவ பரம்பரையை அழியவிடாது பாதுகாப்பதில் ஆயுர்வேத திணைக்களம் அவ்வைத்தியர்களின் பரம்பரை அறிவை பரிசோதித்து அவர்களுக்கு எழுத்துப்பரீட்சை, வாய்மொழிப்பரீட்சை என்பவற்றை வைத்து ஆயுர்வேத திணைக்களத்தில் பரம்பரை வைத்தியர்களாக பதிவு செய்து வருகிறது. ஆனால் இன்று பல்கலைக்கழகமட்டத்தில் சித்தமருத்துவப் பட்டப்படிப்பு யாழ்ப்பாண பல்கலைக்கழகத்திலும், மட்டகளப்பு பல்கலைக்கழகத்திலும் நடாத்தப்பட்டு வருகிறது. சித்தமருத்துவத்தில் பட்டப்பின் கற்கைநெறி இந்தியா எம்.ஜீ.ஆர் பல்கலைக்கழத்தில் நடாத்தப்பட்டு வருகிறது. இலங்கையில் இருந்து சிலா் இக்கற்கைநெறியைக் கற்றுக்கொண்டுள்ளனா். யாழ்ப்பாணத்திலும் பட்டப்பின் கற்கைநெறியை சிலர் கற்றுத்தேர்ந்துள்ளனர். ஆனால் இந்தியாவிலோ அல்லது இலங்கையிலோ முறிவுநெரிவு வைத்தியத்திற்கு பட்டப்பின் கற்கைநெறி ஆரம்பிக்கப்படவில்லை. ஆயுர்வேத வைத்தியத்திற்கு வடஇந்தியாவில் இக்கற்கைநெறி ஆரம்பிக்கப்பட்டுள்ளது. முறிவுநெரிவு வைத்தியத்திற்கு ஓரளவு முழுமையான சித்தவைத்தியப் புத்தகங்கள் வெளிவந்தாக நான் அறியவில்லை. எனது களப்பணி, தகவல்களைச் சேகரித்தல், நூலுருவாக்கம் என்பதற்கிணங்க எனக்கு யாழ்ப்பாணத்தில் பிரபல்யமாக முறிவுநெரிவு வைத்தியம் செய்தவரின் கையெழுத்துப்பிரதி சேதமடைந்தநிலையில் கையில் தொட்டால் சிதைவுறும் நிலையிலிருந்ததை கொண்டு இந்நூல் வடிவமைக்கப்பட்டுள்ளது. ஆனால் வைத்தியர் மருந்துமுறைகளை இலக்கங்களில் எழுதி அந்த இலக்கத்திற்கு உரிய மருந்துகளை குறிப்பிடாமல்

போனதால் சிகிச்சையை தொகுப்பதில் பல சிரமங்களை எதிர்கொண்டேன். எனினும் நாயன்மார்கட்டு வைத்தியர் அமரர் உமாகாந்தன் அவர்கள் மூலம் கிடைக்கப்பெற்ற வைத்திய முறைகளை கொண்டும், சில பரம்பரை வைத்தியர்கள் பாவித்த மருந்து முறைகளையும் கொண்டு நிறைவு செய்துள்ளேன். இயன்றவரை சித்தமருத்துவத்தின் தூய்மையை வெளிக்கொண்டு வந்துள்ளேன். அரச ஆதரவோ அல்லது வேறு எந்த ஆதரவு இல்லாமல் செய்யப்பட்ட பணியாகும். இது எனது நான்காவது புத்தகவெளியீடாகும். தொடர்ந்து பல தகவல்கள் சேகரிக்கப்பட்டுள்ளன.. அவற்றை பரம்பரைமருத்துவம் எனும் நூலக பல பாகங்களாக பிரிக்கப்பட்டு வெளிவிட உத்தேசித்துள்ளேன். இம் முயற்சிக்கு இன்றும் வைத்தியர்களின் ஒத்துழைப்பு இல்லாதது கண்டு மனவேதனையடைகின்றேன். இருந்தும் இந்நூல் பரம்பரைவைத்தியர்களுக்கும், சித்தமருத்துவ மாணவர்கள் இப்பிரிவில் சிறப்புத்தோச்சி பெற உதவும் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. அந்த வகையில் இந்நூல் உங்களுக்கு பயன்படும் போது மட்டிலா மகிழ்ச்சியடைவேன். இனிவரும் காலங்களில் முறிவுநெரிவு வைத்தியத்திற்கான விசேடகற்கைநெறி ஆரம்பிக்கப்படும் போதும், இப்பிரிவில் மாணவர்கள் ஆராய்ச்சி செய்வதற்கும் இந்நூல் பேருதவியாக இருக்கும் எனக்கருதுகின்றேன். இந்நூலை அழகுற பதிப்பித்து உதவிய ஸ்ரீசாயி அச்சகத்திற்கும், இந்நூலை வடிவமைப்பதற்கு பல உதவிகள் புரிந்த எனது மனைவி அன்புச்செல்வி ஸ்ரீதரன் சிரேஷ்டவிரிவுரையாளர், சித்தமருத்துவம், யாழ்பல்கலைக்கழகம் அவர்களுக்கும், பரம்பரை வைத்திய மருத்துவ முறைகளைத் தந்த நண்பர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**வைத்திய கலாநிதி. க. ஸ்ரீதரன்**
பி. எஸ். எம். எஸ், எம்.பில்
58 கே. கே. எஸ் வீதி
கொக்குவில்

01.07.2010

# பக்ந நிதானம்

பக்நம் என்றால் ஒடிதல் அல்லது முறிதல் எனப் பொருள்படும். இதில் எலும்பு முறிவது, அதனாலுண்டாகும் வேறு கோளாறுகளைப்பற்றி விவரிப்பதாகும். இது இருவகைப்படும்.

1. **சந்தி பக்நம்** :- பூட்டுக்களில் உண்டாகும் முறிவு. இதில் இரண்டு எலும்புகளோ, அவற்றிற்கு மேற்பட்ட எலும்புகளோ ஒன்றோடொன்று இணையும் பாகம் சந்தி எனப்படும். விலகி கழலுதல் உண்டாகுமேயன்றி பக்நம் (ஒடிதல்) உண்டாக மாட்டாது.

2. **காண்ட பக்நம்**:- எலும்பின் தண்டில் உண்டாகும் முறிவு. நீண்ட அல்லது குட்டையான எலும்பின் மத்திய பாகத்திலோ முறிவு அல்லது சிதைவு ஏற்பட்டால் அதை காண்ட பக்நம் என அழைப்பர்.

சந்நி பக்நத்தில்

1. உத்பிஷ்டம் (உரைதல் அல்லது தேய்தல்)
2. விச்விஷ்டம் (எலும்புகளின் இணைப்பு அல்லது பூட்டு விலகிப்போதல்)
3. விவர்த்திகம் (எலும்புகள் இரண்டும் திருகிநிற்றல்)
4. திர்யக்கதம் (சந்தியை விட்டு பிரிந்த எலும்பு அவயவத்தை குத்தி குறுக்காக நிற்றல்)
5. ஊர்தவஷிப்தம் (சந்தியிலுள்ள கீழ் எலும்பு விலகி மேலெலன்புடன் ஏறி நிற்கும்)
6. அத.்.ஷிப்தம் (இரண்டு எலும்புகள் அதிகம் விலகுதல்)

ஏதாவது அவயவத்தின் பூட்டானது சிதைவுற்றுக் கழன்று போகுமானால் அந்த அவயவத்தை நீட்டும் போதும். மடக்கும்போதும், திரும்பும் போதும் அல்லது ஒரேநிலையில் வைத்திருக்கும் போதும் வலி மிகக் கடுமையாக விருக்கும். இது சந்நிபக்நத்தின் பொதுகுறிகுணங்களாகும். வலி கடுமையாக விருப்பதற்குக் காரணம் பகல் வேளையில் அபிகாந்தம் அல்லது அசைவு முதலியவற்றால் சயமடைந்த வாயு இரவில் அதிக மாவதால் பிரகோபித்து அதிக வேகத்தைப் பெற்று கடும் வலியை உண்டு பண்ணுகிறது.

எந்த அந்திசந்தியில் எலும்புகளின் முனைகளுக்கு ஒன்றோடொன்று உத்பிஷ்டம் என்கிற உரைதல் அல்லது தேய்வு உண்டாகிறதோ அந்த சந்தியைச் சுற்றிலும் வீக்கம் காணும். இரவு வேளைகளில் வலி அதிகமாகும்.

எலும்புகளுடைய இணைப்பு அல்லது பூட்டு விலகிப் போதல் விச்சேலம் அல்லது விச்சிலிஷ்டம் எனப்படும். விச்சேலம் என்றால் சந்தியில் இரண்டு எலும்புகளும் வெகு சொற்பம் விலகுதலாகும். அதிகம் விலகினால் அது அத.்.ஷிப்தம் என்று அழைப்பர். இதில் எலும்புகளில் தேய்தல் ஏற்படுவதில்லை. ஆனால் வீக்கம் அதிகமாக இருக்கும். இணைப்பிலிருந்து பிரிந்து இரண்டு எலும்புகளும் சிறிது விலகி நிற்குமானால் இவ்விரண்டுக்கு மிடையில் அவயம் ஒருவாறு துவண்டு பள்ளம் விழக்கூடியதாக விருக்கும்.

விச்லிஷ்டத்தில் உத்பீஷ்டத்திற்குக் கூறியவிதமாக வீக்கமும், இடைவிடாத வலியும் தோன்றும். இரவு நேரத்தில் வலி அதிகரிக்கும்.

விவத்திகம் என்றால் எலும்புகள் இரண்டும் திருகிக்கொண்டதுபோல் புறண்டு நிற்கும். அதாவது எலும்புகள் கீழ்மேலாய் புறண்டுவிடும் நிலமையாகும். இதில் எலும்புகளின் அல்லது அவ்வவயவத்தின் பக்கவாட்டில் வலி கடுமையாகவுண்டாகும்.

திா்யக்கதம் என்பது சந்தியை விட்டுப் பிரிந்த எலும்பு அது அடங்கியுள்ள அவயவத்தை குத்திக்கொண்டு குறுக்காக நிற்கும் என்பதாகும். இதில் தீவிரமான வலி உண்டாகும்.

ஊா்த்வஷிப்தம் என்பது சந்தியிலிருந்து கீழெலும்பு விலகி மேலுள்ள எலும்புடன் ஏறி நிற்கும். இதில் இரண்டு எலும்புகளுடைய முனைகளும் ஒன்றன் மேல் ஒன்றாக பாய்ந்து நிற்கும். எலும்பு தன் ஸ்தானத்திலிருந்து விட்டு விலகி மேலே தூக்கிக் கொண்டு நிற்கும் போது வலி அதிகமாகவும், கடுமையாகவும், எலும்பின் இரண்டு பக்கங்களும் ஒழுங்கீனமாக ஒன்று மேற்புறம் தூக்கிக் கொண்டும், மற்றொன்று கீழே தாழ்ந்தும் இருக்கக் காணப்படும்.

அந.:.சஷிப்தம் என்பது ஒரு எலும்பு தன் சந்திஸ்தானத்தை விட்டு கீழே நழுவிப் போனால் அதில் வலி அதிகமாக இருப்பதோடு இரண்டு எலும்புகளும் ஒன்று சேராமல் நிற்கும்.

**காண்டபக்நம்:-**

எலும்புத் தண்டில் உண்டாகும் சிதைவாகும்.

1. கர்க்கடகம்:-
   எலும்பின் இரு பாரிசங்களிலும் பலமான தாக்குதலால் பள்ளம் விழுந்து மத்தியில் மேலெழுந்து பிதுக்கிக் கொண்டிருப் பதால் ஒருவாறு அக்கோளாறு நண்டைப் போல் தோற்றுமாகையால் இச்சிதைவுக்கு கற்கடகம் என்று பெயர்.
2. அச்வர்ணம்:
   இதில் எலும்பானது ஒருவாறு தட்டையாகச் சிதைவடைந்து குதிரையின் காது போல் தூக்கிநிற்கும்
3. விசூர்ணிதம்:-
   எலும்பு பொடியாக உடைதல். (பரிசிப்பதாலும், அவ்விடத்திலுண்டாகும் சப்த உணர்ச்சியாலும் இதை அறியலாம்.
4. பிச்சிதம்:
   எலும்பு நசுக்கப்படுவதால் உண்டாகும் கோளாறு..
5. அஸ்திச்சல்லிகா:
   எலும்பைச் சூழ்ந்துள்ள ஒருவித சவ்வுப்போர்வையின் சிதைவு.
6. காண்டபக்கம்:-
   காண்டம் என்றால் எலும்புத்தண்டு, கர்க்கடகம் முதலிய தும் காண்டபக்நத்தைச் சேர்ந்ததாயினும், அவை ஏகதேசச் சிரைவாயிருப்பவை. எலும்புத்தண்டு இரண்டு துண்டுகளாக முறிவது முக்கியமாக காண்ட பக்நம் என்று கூறப்படு கிறது.

8. அதிபாதிதம்:-

எலும்பு ஏதாவது சிதைவடைந்து அதன் இடத்தை விட்டு முற்றிலும் வெளிப்பட்டுப் போவது அதிபாதம் எனப்படும்.

9. மஜ்ஜாகதம்:

எலும்புக்குள் மஜ்ஜை என்கின்ற தாதுவில் பாய்ந்து அதைச்சிதைத்தால் மஜ்ஜைஜாகதம் எனப்படும்.

10. ஸ்புடிகம்:-

எலும்பில் ஒரு சிறிது பிளவுண்டாய் எலும்புச் சில்லி பெயர்தல்.

11. வக்கிரம்:

எலும்பு வளைந்து போதல் ஆகும்.

12. இரண்டு: வகையான சிந்நங்கள்

சிந்நம்:- நெடுகப் பிளவுறுதல். இது அணுவிகீர்ணம், (சிறுபிளவு), பஹுவிதீர்ணம் (பெரிய பிளவு) என 2 விதமாகும்.

கண்ட பக்நம் பன்னிரண்டு விதமாகும்.

இவற்றில் அவயவம் துவளுதல், வீக்கமும் வலியும் மிகவும் அதிகரித்திருத்தல், மெதுவாக அழுத்திப் பார்க்கையில் நற நறவென்று சத்தமுண்டாவதால் பரிசிப்பதை தாங்கவியலாது இருத்தல், துடித்தல், குத்தல், வலி எந்த நிலமையிலும் அமைதியின்மை ஆகியவை பொதுக்குறிகுணங்களாகும். எலும்பு அதன் தண்டில் சிதைவுறும் வகையில் இன்னும் பல வேறு பேதங்கள் உண்டு. ஆனால் அதனதன் குறிகளைக் கொண்டு அதற்கேற்ற பெயரை வழங்கலாம்.

## ***அஸ்த்திபக்நத்தில் கஷ்டசாத்திய நிலமைகள்***

போதிய உணவெடுத்துக் கொள்ளாதவன், தன்நிலமையறியாது தோன்றியவாறு நடப்பவன். வாதப்பிரக்கிருதியானவன், உபத்திரவங்களோடு கூடியவன். இதில் உபத்திரவங்கள் எனும் போது காய்ச்சல், மூத்திரம் கட்டிப்போதல், மலபந்தம் ஆகியவர்களுக்கு எலும்பு முறிவு கஷ்டசாத்தியமாகும்.

கடிகபால என்கிற இடையெலும்பு பிந்நமாவது ( பிந்நம் என்பது கபாலமென்கின்ற எலும்பு உடைவதைக் குறிப்பிடும் பெயராகும். சிரசு, கன்னம், நெற்றி, தாடை, செவிகளின் பக்கம், மார்பு, இடுப்பு, தோள்பட்டை முதலானவிடங்களில் உள்ள அகன்ற எலும்புகள் கபால சந்திகள் எனப்படும்.

சந்திமோஷ என்கின்ற பூட்டு விலகுதல் ( இடுப்பு முதலியவிடத்தில் சந்திகளில் எலும்பு நழுவிவிடாது சிகிச்சிக்கக்கூடியது என்பது சிலரது கொள்கை)

முன்குறிப்பிட்ட அத்.சஷிப்தமென்கிற கோளாறும், பிருஷ்டபாகத்திலுள்ள எலும்பு உத்பிஷ்டம் என்கிற முற்கூறிய முறிவையடைவதும் இவை யாவும் அசாத்தியமானவையாகும். மேலும் ஒன்றோடொன்று இணைக்கப்படாத கபாலசந்தி, நெற்றியிலுள்ள கபாலசந்தி இவை நொருங்கிப் போனாலும் மார்பிலுள்ள உரோஸ்தி, இடுப்பிலுள்ள ப்ருஷ்டாஸ்தி, சங்காஸ்தி என்கிற கன்னத்தெலும்பு, தலையிலுள்ள கபாலசந்தி இவை உடைந்தாலும் சிகிச்சை அசாத்தியமாகும். ( சங்காஸ்தி (கன்னத்தெலும்பு) சிரசின் எலும்பு, மார்பிலுள்ள மத்திய எலும்பு இவை உடைந்தால் மரணமுண்டாகும்.

விலகிப்போன அல்லது முறிந்து போன அஸ்திகள் ஒன்றோடொன்று சேர்ப்பித்த பிறகு நன்றாக கட்டிவிட்ட போதும் அவற்றை சேர்ப்பித்த வகையும் பந்தம் செய்த முறையும் ஒழுங்கீனமாக இருந்தாலும் அவை அதிர்ச்சி முதலியவற்றால் பலவாறு அசைந்து விகாரமடைந்தாலும் அவையும் ஒழுங்கீனமாக நின்று விடும்.

### *பலவித எலும்புகளில் உண்டாகும் கோளாறுகள்*

தருணாஸ்த்திகளென்கின்ற முருந்தெலும்புகள் (நாசி, தொண்டை,விலாவென்புகள் சேருமிடம் முதலியவற்றிலுள்ள மிருதுவான எலும்புகள் தருணாஸ்த்திகள் எனப்படும். இளங்குழந்தைகளுடைய எலும்பும் தருணாஸ்த்தி போலவே

மிருதுவாகவிருக்கும். இந்த விதமான எலும்புகள் அபிகாத்தினால் முறிவடையாமல் வளைவது இயல்பு. அவ்வித வளைவுக்கு அஸ்த்தாமநம என்பர்.) அபிகாதாதிகளால் வளையும். நளகமென்கிற நீண்ட எலும்புகள் ஒடியும். (கை, கால், விலாப்பக்கம், விரல்கள் முதலிய அவயவங்களின் நீண்ட எலும்புகள் நளகங்கள் எனப்படும். அவ்வித என்புகள் முறிவது இயல்பு. அம்முறிவுக்கு அஸ்த்தியங்கம் அல்லது அஸ்த்திபேதம் என்பர்.)

கபாலஸ்த்திகள் என்கிற பலகை போன்ற அஸ்திகள பீங்நமாகும். அல்லது பிளந்துபோம். (சிரசு, கன்னம், இடை முதலியவிடத்து எலும்புகள் கபாலசந்திகள். அவை உடைவதற்கு பிந்நம் என்பது பெயராகும்.)

ருசகங்களென்கிற சிறிய எலும்புகள் ( வம்சாஸ்த்திகள் என்கிற முதுகெலும்புகள், பற்கள், கணுக்கை, கணுக்கால் முதலியவிடத்திலுள்ள சிறிய உருண்டை வடிவமான எலும்புகள் ருசகங்கள் எனப்படுகின்றன. அவை உடையும் வகைக்கு ஸ்புடநம் என்பர்) உடையும்.

## *எலும்புகளில் உண்டாகும் ரோகங்கள்*

**அஸ்தினிபோஷம**:- எலும்புகள் ஒன்றாகினும் அல்லது பலவாகினும் அதன் நீளத்திலும், அகலத்திலும் போசணைப் பேதத்தினால் இவ்விகாரம் உண்டாகிறது. இதனை மாற்றுவதற்கு போகமான மருந்துகள் உண்டானால் தீரும்.

**அபாஸ்த்தி**:-தேகத்திலுள்ள எலும்புகளில் யாதொன்றிலிருந்து எலும்பு தாக்குண்டு இந்நோய் உருவாகிறது. இது மேகரோகத்தாலும், புற்றுநோய்த்தாக்கத்தினாலும் உருவாவதாக நம்பப்படுகிறது. பெரும்பாண்மையாக தொடைஎன்பின் கீழ்ப்புறத்திலும், புயவென்பின் மேற்புறத்திலும் உண்டாகிறது.

இவைகளிற் சில தட்டைவடிவாயும், சில அடிஒடுங்கி உருண்டை வடிவாயும் இருக்கும். இவை நரம்புகளையாவது, நாடிகளையாவது அமர்த்தாது இருக்கையில் யாதொரு உபாதியும் இருக்காது. இவை பருக்கும் போது உள்ளுறுப்புக்களை முட்டி அவற்றை தத்தம் கருமங்களைச் செய்வதை தடுப்பதால் பல உபத்திரவங்களை உண்டாக்கும். இவை கபால எலும்பின் உள் வளருமாயின் வலி உண்டாகும். கண்மடலிற்குள் வளருமாயின் கண்பிதுங்கி முகத்திற் தூங்கும். இவைகளினால் நாடிகள் அடைபட்டு, தசைகளின் செயற்பாடு குன்றி பொருத்துக்களின் அசைவும் குன்றும்.

**பிரயோகம்:-** கொப்புளப்பற்று. இரசதைலம் முதலியன இட்டு பொருத்து வற்றும்படி செய்ய வேண்டும். இவற்றால் தீராவிட்டால் என்பு மொக்கை அறுத்தெடுக்க வேண்டும். ஈர்வாளால் அரிந்து

உளியிட்டுச்சீவி எடுக்கலாம். இப்பிரயோகத்தினால் மொக்கிழந்த எலும்பிலும், அவ்வென்பின் இரு தலைகளிலுமுள்ள பொருத்துக்களிலும் தாபிதம் ஏற்படாமல் பாதுகாக்க சிகிச்சிக்க வேண்டும்.

***அஸ்தி போஷம்:-*** எலும்புகளில் பாரங்குறைவதால் ஏற்படும். இவ்வெலும்பு பருமனில் குறைந்து மேற்புறம் ஓடாயிருக்கும். உட்புறம் கோதாகி இருக்கும். இவ்வென்புகளின் பொருத்துக்கள் நோய் கொள்வதனாலும், செவ்விரத்தம் என்புக்கு செல்லாதிருப்பதனாலும், முதிர்ச்சியினாலும் இந்நோய் ஏற்படும்.

***அஸ்திக்குடிகம்:-*** சயநோயாளிகளில் கல்சியக்குறைவால் இந்நோய் ஏற்படும். இதில் எலும்புகளின் வெளிப்புறம் மிருதுவாகவும், உட்புறம் கடற்பஞ்சின் மேற் கண்ணறை போன்று காணப்படும். இதில் செந்நீர் காணப்படும். சரீரத்தை எலும்பு தாங்க முடியாமல் முள்ளந்தண்டு சற்று வளைந்து காணப்படும். தொடைகள், கால் என்புகள் வளைந்து காணப்படும்.

***பிரயோகம்:-*** சயரோகத்தை சிகிச்சிப்பதும், தேகத்திற்கு புஷ்டியைக் கொடுக்கக்கூடிய உணவுகளை உண்ண வேண்டும். உடல் வளைவுக்கு சரீரத்தை பலப்படுத்த நிமிரும். தொடை, கால் வளைவுகள் நிமிராதாகையால் சரீரத்தை பலப்படுத்தும் வரை நிறுதிடமாய் இருக்க வேண்டும். கணைக்கால் தொடக்கம் தொடை வரைக்கும் மெத்தையிட்டு அதன் மேல் தப்பை வைத்து சற்றே இறுக்கமாக சீலையால் சுற்றிக்கட்டிவிடவேண்டும். இக்கட்டோடு முழங்காலை மடக்காமல் நடக்க பயில வேண்டும். தப்பையை நாள் தோறும் அவிழ்த்தெடுத்து கால்களைக் கழுவி பின் கட்டிவிட வேண்டும். இவ்வகையாதாரமில்லாமல் நோயாளியை மிகுதியாக நிற்கவோ, நடக்கவோ விடக்கூடாது. கல்சியம் தாதுவைக் கொடுக்க வேண்டும். பால் சிறந்தது.

***அஸ்தி மாரனகம்:-*** இந்நோய் வயோதிபப் பெண்களுக்கு உண்டாகும். இந்நோயில் எலும்பின் தலைபருத்து நடுப்பகுதி வளைந்து இலகுவில் முறிந்து விடும். எலும்புகள் சிலவற்றில் சவ்வுறை மாத்திரம் இருக்கும். இந்நோயாளியின் சலத்தில் கல்சியம் கூடுதலாக வெளியேறும். இந்நோய் சரீரத்தில் தாக்கி எலும்புகள் யாவற்றையும் தாக்கும். இதனால் எலும்பில் உழைவு தோன்றும். தேகம் பலவீனப்பட்டு வியர்வை உண்டாகும். எலும்புகள் முறிய வழிவகுக்கும். இந்நோய்க்கு உபாதையை தணிக்கவும், சரீரத்தை பலப்புடுத்தவும் முடியுமே தவிர நோயை ஆற்றும் மருந்தில்லை.

***என்பின் தீவிர தாபிதம்:-***

வயதானவர்களுக்கு தொடைஎலும்பானது, காலெலும்பானது இவற்றில் தீவிரதாபிதம் ஏற்படுவதுண்டு. அஸ்தி என்புகள் சந்திக்கும் தலைகளில் பற்றுவதில்லை.

***குணம்-*** குளிர்காய்ச்சல் உண்டாகும். நோய் கொண்ட உறுப்பு வீங்கும். என்பு அச்சின் வழியாக உடலெங்கும் பரவும். என்புகளில் நோய் கடுமையான நிலையில் சீழ் உண்டாகும். என்பு மக்கிப்போகும்.

***பிரயோகம்:-*** நோய் கொண்ட என்புக்கு அட்டை விட்டு இரத்தச் சுத்திகரிப்புச் செய்ய வேண்டும். அத்தடன் விரேச்சனத்திற்கும், சுரம் தணியவும் மருந்துகள் கொடுக்க வேண்டும். சீழ் பிடித்து மெதுமெதுப்பு கொண்டவுடன் சத்திரசிகிச்சை செய்து சீழ் உள்ளே தங்காமல் எடுக்க வேண்டும். நோயாளிக்கு பிரமண சிகிச்சை செய்து ஆற்ற வேண்டும்.

***அஸ்தி பூயதம்:-*** துப்பாக்கிக்காயங்களினாலும், இரணங்கூடிய முறிவினாலும் எலும்பைத்தாவின சத்திரப்பிரயோகத்தினாலும், எலும்பை சேதப்படுத்தினால் அதன் உட்குழாய் எங்கும் பரவிச்சீழுண்டாகும். இந்நோய் உண்டாகும் காலத்தில் எலும்புகள் வேதனை கொள்ளும். அவயவம் பெருக வீங்கி மினுமினுப்பு கொள்ளும். காயத்தில் பதனழிவு உண்டாகும். எலும்பில் பிடித்துள்ள சீழ் அதிலுள்ள நாளங்கள் வழியாக இரத்தத்துடன் சேர்ந்து நாளப்பூயோதிரம் எனும் நோய் உருவாகும். ஆகாரங்களினாலும், பிரமணசிகிச்சையாலும் சரீரத்தை பாதுகாத்தல் வேண்டும்.

***என்பின் காவித்தாபிதம்:-***

சர்வாங்கத்தில் ஏற்படும் ஒருவிதத் தாக்கத்தினால் இந்நோய் ஏற்படும். எலும்புகளில் பற்றி எலும்புகள் வீங்கும். கால் ஊன்ற நோகும்.

***பிரயோகம் :-*** இடையிடை அட்டை விட்டு வெந்நீர்ச்சீலையிட்டு வரவும். மருந்துகளினால் தீரும். கொப்புளப்பற்று போடலாம்.

***பரியஸ்தியத்தின் தாபிதம்:-*** இந்நோய் விசேடமாக கைகால்களிலுள்ள நீண்ட எலும்புகளிலும், செத்துரு எலும்புகளிலும், கபாலத்திலும் உண்டாகும். இந்நோய் உண்டாகும் போது என்பை மூடியிருக்கும் சவ்வுறையிலாவது, அச்சவ்வுக்கும் என்புக்கும் இடையிலாவது ஒரு நீர் ஊறிக் 'குல்மம்' எனும் திரட்சிகள் உண்டாகும். இத்திரட்சிகளில் நோவும், இரவில் மிகுந்த வேதனையும் உண்டாகும். தீவிரதாபிதத்தில் இச்சவ்வு தடித்து மிருதுவாகி இரத்தம் கோத்து என்பைவிட்டுக்

கழலும். சவ்வின் கீழ் சீழ் இருக்கும். என்பு பெருக்கும். என்பு மக்கும். இவ்வியாதி சயம், வாதம், உபதஞ்சம் எனும் ரோகங்களில் உண்டாகும்.

***பிரயோகம்:-*** தீவிர தாபிதத்தில் அட்டைவிட்டு வெந்நீர்ச்சீலைவிட்டு அபின் கொடுக்க பித்தம் தணிந்து தீரும். கொப்புளப்பற்று சிறப்பானது. எலும்புக்கும், சவ்வுக்கும் இடையில் சீழ் கட்டியிருப்பின் சத்திரசிகிச்சை செய்யவும்.

***என்பில் விற்புருதி:-*** என்பில் ஏற்படும் தாபித்தினால் ஏற்படும். எலும்பில் சீழ் கட்டும். மக்கின எலும்புத்துண்டு இருக்கும். தாபிதத்தினால் நோஉண்டாகி என்பு பெருக்கும்.

***பிரயோகம்:-*** எலும்பில் விறபுருதி உண்டு என்று நிச்சயித்தால் புள்ளடியாய் தோலைக்கீறி எலும்பை வெளியாக்கி நோ உள்ள இடத்தில் என்பைத் திறவின் என்னும் துரப்பணத்தால் துளைத்து சீலை பிரயோகித்து பின்பு காயத்தை ஆற்றுவதற்கான சிகிசசை மேற்கொள்ள வேண்டும்.

***கிகதம்:-*** தசை, தோல் என்பன பதனழிவது போல் என்பும் பதனழியும். இந்நோய் கணைக்கால் எலும்பு, தொடைஎலும்பு ஆகியவற்றில் ஏற்படும். நகச்சுற்றுண்டாவதால் விரல் என்புகளிலும், மேகரோகத்தினால் கபால என்புகளிலும், முறிவுநெரிவுகளினால் முன்னங்கை, காறை என்புகளிலும் சிறுபான்மையாய் இந்நோய்பற்றும். இந்நோய் எலும்பின் வெளிப்புறமாகினும், உட்புறமாயினும், அதன் நடுப்பகுதியிலாவது பற்றும். மக்கிய என்புத்துண்டு 'விகிதம்' எனப்படும். அது வெண்மை கலந்த மஞ்சள் நிறமாக அதன் விளிம்பு கருக்குப் போன்றும், உட்பகுதி கறையான் அரித்தது போன்று இருக்கும். வெளிப்பகுதி அழுத்தமாக இருக்கும்.

***குணம்:-*** இந்நோய் தாபிதக்குணங்களோடு தொடங்கும். நோய் கொண்ட உறுப்பின் தோல் சிவந்து, வீங்கி பளபளப்பாக இருக்கும். எலும்பு மக்கும். அளவுக்கதிமாக விற்புருதி உண்டாகி

விசாலித்து, உடைத்து பல ஒடுக்கண்கள் வைத்து சீழ் பாயும். இக்கண்களில் சில அழற்சியான தசை அரும்புகள் உண்டாகும்.

எலும்பின் உட்படை பழுதாகும் போது வேதனை வெளிப்புறத்தாக்கத்தின் வேதனையை விட குறைவானது. எலும்பு ஆரம்பத்தில் சொறியுள்ளதாகவும், கண்ணற உடையதாகவும், இரத்தக்குழாய்கள் மிகுதியாகவிருக்கும் பின்னா் சற்று இறுகி வைரங்கொள்ளும். இவை பழுதாகி வட்டித்துவாரங்கள் உண்டாகும். இத்துவாரங்களினூடாக சீழ் வடியும். எலும்பின் சவ்வுறை முற்றாக அற்றுப்போகும். அதில் துவாரங்கள் உண்டாகும். இதில் பழைய எலும்புகள் பழுதடைய சிறுபான்மை எலும்புகள் பூரணமாக உண்டாவதில்லை.

***பிரயோகம்:-*** வேறு நோய்கள் (சய,மேக) உண்டானால் அதற்கு சிகிச்சை செய்ய வேண்டும். பழுதடைந்த எலும்பை தானாக வெளிவர விடவேண்டும். இந்நிலையில் தாபித குணங்கள் தென்பட்டால் அதற்கு சிகிச்சை செய்ய வேண்டும். விற்புருதிகள் உண்டாகில் சத்திர சிகிச்சை செய்ய வேண்டும். பழுதடைந்த எலும்பை நிர்ணயித்து அது எலும்பின் மேற்றாடையைப்பற்றி இருந்தால் தோலையும் தசையையும் கீறி கிளப்பி எடுக்க வேண்டி ஏற்படும். பழுதான எலும்பு புதிதாக உருவான எலும்பினால் மூடப்பட்டிருந்தால் அப்புது எலும்பினூடாக துவாரங்களின் ஒடுக்களின் நேருக்குத் தோலைக்கீறி எலும்பை வெளியாக்கி அதிலுள்ள துவாரங்களின் வழியாக பழுதடைந்த எலும்பை எடுக்க வேண்டி ஏற்படும். இங்கு எலும்பை எடுக்க துவாரத்தை பெருப்பிக்க வேண்டும். இந்நிலையில் இரத்தம் கும்பர் கும்பராகப் பெருகும். அதை அமத்தி தடுத்து பின்பு காயத்திற்கு மருந்து இட்டு உறுப்பை உயர்த்தி வைக்க வேண்டும். தாபிதம் இருந்தால் அதற்கு பிரயோகங்கள் செய்ய வேண்டும். புது எலும்பு சரீரத்தை தாங்குவதற்கு போதிய ஆதாரம் இல்லாதிருப்பதால் மெல்லிய தப்பைகள் வைத்து தடித்த கட்ட வேண்டி ஏற்படும்.

பழுதடைந்த எலும்பை எடுக்ககூடாதபடிக்கு மிகவிகாரமாகவும், அசைவற்றதாகவும் இருந்தாலும்

சீழ்பெருக்கத்தினால் நோயாளி துன்பப்பட்டாலும், நோய் கொண்ட உறுப்பு அதிகமாகச் சீர்குலைந்திருந்தாலும் உறுப்பை கட்டாயம் சோதிக்க வேண்டும்.

நெஞ்செலும்பு, பட்டையெண்பு, கூபகஎன்பு முதலான தகட்டெலும்புகள் பழுதடையும் போது அவைகள் இலகுவாக உயிரென்பைவிட்டு பிரியாமலும் கழராமலும் இருப்பதனால் மிகுந்த உபாதியுண்டாகும். இவற்றை அறுத்து எடுக்க வேண்டும்.

இடையூறுகளினாலும், சயநோயினாலும், கபாலஎன்புகள் பழுதடையும். இதனால் மூளையிலும், அதை மூடியிருக்கும் சவ்வுகளிலும் தாபிதங்கள் கொள்ளக்கூடும். மேகநோயில் உச்சந்தலையிலே எலும்பின் மேற்பட்டை மாத்திரம் பெரும்பாலும் பழுதடையும்.

கபாலத்தின் மற்றவிடங்களில் இந்நோய் உண்டாகும் போது மூளையில் நோய் சீக்கிரமாக பற்றுகிறது போல் இதிலுண்டாகும் போது பற்றாது. சயநோயில் சீழ் நெற்றியிலும், கட்புருவங்களிலும் உள்ள எலும்புகளில் இந்நோய் பெரும்பாலும் உண்டாகும். இவ்விடங்களில் பழுதடைந்த எலும்பு இலகுவில் கழராது. ஆகையினால் நறுக்கி எடுக்க வேண்டி ஏற்படும். கபாலத்திலுள்ள எலும்பின் அடிப்பகுதி பழுதடைந்தால் நோயில் தாபிதம் எழும்பி மரணமுண்டாகும். கீழ்தாடைஎலும்பு பழுதடைந்தால் அது கழன்று பின்வாய்வழியால் இழுத்தெடுக்க வேண்டும். பழுதடைந்த எலும்பு பெரிதாக இருந்தால் வெளிப்புறத்தில் சீவி எடுக்க வேண்டும்.

பழுஎன்புகள் பழுதடையும் போது விப்புருதிகளும் ஒடுக்களும் மிகுதியாக உருவாகும். இவற்றைக்கீறி பழுதடைந்த என்பை எடுக்கும் போது என்புத்தோண்டியால் துருவி எடுக்க வேண்டும். துருவும் போது ஆயுதம் நெஞ்சறைக்குட் பாயாதபடி கவனமாகக் கையாள வேண்டும்.

***கலிதம்:-*** எலும்பு தாபிதம் கொண்டு மெதுவாக கரைந்து போகும். மேகநோய், சயநோய் போன்றவற்றால் தேகம் துர்ப்பலப் படுவதனால் தட்டைஎன்புகள், நீண்டஎலும்புகள், திரண்ட

எலும்புகளின் தலைகளில் நொய்மை ஏற்பட்டு இந்நோய் உண்டாகும். இந்நோய் கொண்ட எலும்புகள் துவாரமுள்ளதும், இலகுவில் முறியக்கூடியதும், கருமைநிறம் கொண்டதுமாகும். சில இடங்களில் நுகைந்தும் கரைந்துமிருக்கும். சில இடங்களில் பள்ளமாக அரிக்கப்பட்டது போன்று இருக்கும். சில பள்ளங்கள் கருஞ்சிவப்பாகவிருக்கும். இப்பள்ளங்களில் பழுதடைந்த என்புத்துண்டுகள் இருக்கும். பழுதடைந்த என்புப் பகுதியிலும், சவ்விலும் இரத்தக்குழாய்கள் மிகுதியாகக் காணப்படும்.

***குணங்கள்:-*** என்பில் வேதனை காணப்படும். விற்புருதி உண்டாகி என்பில் ஒடுக்கண்கள் உண்டாகும். இவற்றின் வழியாக துர்கந்தமும், கறுத்த நிறம் கொண்ட சீழோடு குருணல் குருணலாக என்பு கலந்து புறப்படும். என்புகளில் தசை வளர்ந்து மூடிக்கொள்ளும். இதனை சூழ்ந்திருக்கும் தோல் தாபிதங் கொண்டு செங்கல் மங்கலாய் இருக்கும்.

***பிரகோபம்:-*** இங்கு மேக,சய ரோகங்களால் உண்டானால் அதற்கு சிகிச்சை செய்யவேண்டும். தாபிதத்திற்கு சிகிச்சை செய்ய வேண்டும். தேகத்தை பலப்படுத்தக்கூடிய மருந்துகள் பாவிக்க வேண்டும். இப்பிரயோகத்தால் மாறாதிருந்தால் நோய் கொண்ட இடத்தை புள்ளடி வடிவாகக்கீறி எலும்பை வெளியாக்கி என்புத் தோண்டியால் எலும்பை வெளியெடுக்க வேண்டும். பின் சிகிச்சை செய்தல் வேண்டும்.

## *எலும்பிலிருந்து வளரும் கழலைகள்*

***உதிரக்கழலை:-*** எலும்பில் உள்ள சிற்றறைகளில் உறைந்த இரத்தத்தையாவது அல்லது வேறுவகையான நீரையாவது உள்ளே பொதிந்திருக்கும். இதில் தோலும், சந்துகளும் புண்பட்டு இரத்தம் அதிகமாக பெருகும்.

***பிரயோகம்:-*** நோயை நிதானித்து என்பைக்கீறி எடுத்துவிடவேண்டி ஏற்படும்.

***எலும்பில் துடிக்கழலை:-*** இரத்தக்குழாய்கள் பருத்து மிகுதியாகச் சேர்வதனால் இவைகளில் நாடிகளின் இயக்கம் எதிர்க்காய்த் தோன்றுவதால் கழலைகள் உருவாகின்றன. இக்கழலைகள் 3 வகைப்படும்.

1. ***புற்றினம்:-*** இதில் நொய்மையாகவும், இரத்தக்குழல்கள் மிகுதியாக உள்ளதுமான ஓர் களிப்பதாத்தம் அதிகமாகச் சேர்ந்திருக்கும்.
2. இரத்தக்குழாய்கள் ஒன்றோடொன்று வலை போல் பின்னப்பட்டு சிவப்பு நிறம் கொண்ட கழலைகள் எலும்பில் வளரும். இக்கழலைகள் அபூர்வமாக உண்டாகும்.

3. இயல்பாக எலும்பில் சாதாரணமாக உள்ள நாடிகள் பருத்து வீக்கம் காட்டும். இதனை அஸ்திசுராதி என்பர். இது நீண்ட எலும்பின் சந்துக்களில் பெரும்பாலும் தோன்றும். விசேடமாக கணைக்கால் எலும்பு முழங்கால் பொருந்தும் சந்தே பாதிக்கப்படும். இதில் மிகுந்த வேதனை காணும், வீக்கம் காணும். கணைக்காலில் உள்ள நாளங்கள் வீங்கி சில காலம் சென்ற பின் நோய் கொண்ட உறுப்பு முழுவதும் சுருங்கும். கழலையில் நாடித்துடிப்பு விளங்கும். அதனைத் தொடர்ந்து பார்க்க கரகரப்பாகவும், உரப்பாகவும் இருக்கும். புயம், முன்கை, தொடை, இடுப்பு எனும் பகுதிகளில் இக்கழலைகள் உருவாக வாய்ப்புண்டு. நோய் கொண்ட உறுப்பை சோதித்தாவது அதற்குச் செல்லும் பிரதான நாடியை கட்டியாவது விடுவதே பிரயோகம்.

எலும்புக்குள்ளே வளரும் கலவைக்கழலைகள் பல பேதமானவையாகவும், பல வஸ்த்துக்களைக் கொண்டவையாகவும் இருக்கும். இக்கழலைகள் சில ஒரே அறை உடையனவாகவும், சில பல அறைகள் உடையனவாகவும் உள்ளன. தனியறையுள்ள கழலைகள் நீர்தன்மையாகவும், பல அறையுடையது வைரமாகவும் உள்ள கழலைகளைக் கொண்டிருக்கும். இவை பெரும்பாலும் தாடைஎலும்புகளிலும், தொடை, புயம், கணைக்கால் என்புகளின் அந்தங்களில்

வெளிப்பகுதிகள், உட்பகுதிகளில் பெரும்பாலும் உண்டாகும். இது பெரிதாக வளர்ந்து தேகத்திற்கு துன்பத்தை உண்டாக்கும். இதனை வெட்டி அப்புறப்படுத்திவிட்டால் திரும்ப உண்டாகாது. நீர்தன்மையான கழலைகள் வைரமான கழலையை விட பெரிதாக வளரும். தேங்காயின் பருமனாக வளரும். இவற்றை மூடி இருக்கிற எலும்புகள் ஒரே பருமனாக இருக்காது. இந்நோய் இளம்பிராயர்களை விட வாலிபப்பருவத்தினருக்கு உண்டாகும். எலும்பு கோதாகி மென்மையடையும்.

***பிரயோகம்:-*** கழலை வைரமாகமாகிலும், நீர்த்தன்மையாயினும் அதனை சோதிப்பதன்றி வேறு வழிகளால் நழுக்கக்கூடாது. அது தாடையில் இருந்தால் நொருக்க வேண்டும். கை,கால்களில் இருந்தால் அங்கசேதனம் செய்ய வேண்டும். சிறிதாகவிருந்தால் அரிந்து எடுக்க வேண்டும்.

***ஆபகம்:-*** எலும்பு தெளிவான ஓர் நீரைச் சேர்க்கும் சவ்வுக்கூடுகள் உண்டாகும். அதில் எலும்பு அழன்று அளையாகி கழலையாகும். இதனை வெட்டிச் சோதிக்கலாம். வேறு வகையாக நிதானிக்கமுடியாது. எலும்பில் உண்டாகியிருக்கும் விகாரத்திற்குகேற்ப பிரயோகம் செய்ய வேண்டும்.

***எலும்பில் புற்றுக்கழலை:-*** இது அசாத்திய ரோகம். இதில் இரண்டு விதமுண்டு. அதில் ஒன்று எலும்பினுள் உள்ள குழாயில் தோன்றும் மற்றது எலும்பின் வெளிப்பகுதியில் தோன்றும். எலும்பில் உண்டாகும் புற்றில் எலும்பின் தலைகளில் உருவாகும். இது ஓரிடத்தில் மட்டுமன்றி வேறு இடங்களிலும் தாவி இருக்கும். எலும்பை மூடும் சவ்வுறையில் உண்டாகி எலும்பின் வெளிப்படையில் தோய்ந்திருக்கும். உட்குழாய்க்கிறங்காது. நோய் கொண்ட இடத்தில் பிடித்திருக்கும் தசையிலும் புற்றுநீர் பிடித்திருக்கும்.

புற்றுரோகங்களில் வெண்புற்றே பெரும்பாலும் எலும்புகளில் தாக்கும். நுங்குப்புற்று, கடும்புற்று என்பன சிறுபாண்மையாகக் காணப்படும். வன்புற்று எலும்பில் உண்டாவது குறைவு.

என்புப்புற்று பெரும்பாலும் கணைக்கால் எலும்பு, தொடை எலும்புகளில் உண்டாகும். சிறுபாண்மையாக முகஎலும்பு, புயஎலும்பிலும் காணப்படும். எலும்பின் தலைப்பகுதியில் நோய் உண்டானாலும் எலும்பும் பொருந்தும் பொருத்திலுள்ள வைப்புக்களில் தாவி கொடூரம் விளைவிக்கும்.

***குணம்:-*** எலும்பு அதிக விரைவாகப் பெருகி கழலை தோன்றும். இக்கழலை உருண்டை வடிவமாகவிருக்கும். மெதுமெதுப்பாகவும் ஊசியால் குத்துவது போல் வேதனை இருக்கும். இதில் தொடுத்துள்ள நாளங்கள் ஒன்றோடொன்று பின்னி புரி விடுத்திருக்கும். நோய் கொண்ட உறுப்புக்களில் தாவி சோஷணக் கிரந்திகள் உருவாகும். இறுதியில் மரணமுண்டாகும்.

## *எலும்பில் உண்டாகும் ஊறுகள்*

***முறிவு:***

உறைப்பான தாக்குதல்களினாலும், பேசி கடுதியாக இயங்குவதாலும் எலும்புகள் முறியும். இம்முறிவு எலும்புகள் தாக்கப்பட்ட இடத்திலாவது அல்லது காணப்பட்ட இடத்திற்கு தள்ளியாவது சம்பவிக்கும். தாக்குண்ட இடத்தில் எலும்பு முறிந்தால் அம்முறிவையன்றி தோல், தசை, நரம்புகளும் பழுதாகும். தாக்குப்பட்ட இடத்திற்கு தள்ளி முறிவதில் பெரும்பாலும் நெடுஎலும்புகளே தாக்கப்படும்.

பேசிகள் பலவிதமாக இயங்குவதால் பெரும்பாலும் முழந்தாட்சில்லும் மற்றும் எலும்புகளிலுள்ள முனைகளும், சிறுபாண்மையாக செத்துருஎன்பு, புயஎன்பு, தொடைஎலும்பு என்பவைகளும் முறியும்.

தாக்குண்டதே எலும்புகள் முறிவதற்கு ஏதுவாக இருந்தும் அம்முறிவு உண்டாவதற்கு எலும்புகளில் முன்னமும் பற்றியிருக்கிற காரணங்கள் பலவுண்டு. சில எலும்புகள் அதிபாரத்தை தாங்குவதால் முறியக்கூடும். ஒரு ஆள் கையடிபட விழும் போது அதனால் ஏற்படும் அதிர்ச்சி கைக்குழைச்சிலிருந்து

சரீரத்திற்கு முன்கை என்பு, புயஎன்பு, செத்துரு என்பு என்பவைகளின் வழியாகச் செல்லும். அவ்வென்புகளில் முன்கைஎன்பும், செத்துரு என்பும் மெல்லிய என்புகளாக இருக்கிறதால் அவைகளே முறியக்கூடியதாகவிருக்கும். சில என்புகள் இருக்கிற நிலையத்தின் நிமித்தம் முறியக்கூடிதாகவிருக்கும்.

நாசி என்புகள் மிதந்திருப்பதனாலும் செத்துரு என்பினோடு பொருந்தும் முனை வெளியால் இருப்பதினாலும் இவ்வூறு அவ்வுறுப்புகளுக்கு விசேடமாக சம்பவிக்கிறது. சில என்புகளின் தூங்கம் முறியக்கூடிய தூங்கமாய் இருக்கும். சில என்புகளில் ஓரிடத்தைப் பார்க்கிலும் ஓரிடம் இலகுவாய் முறியக்கூடியதாய் இருக்கும். பெரும்பாலும் உரப்பான பேசிகள் பற்றிப்பிடித்திருக்கும் இடங்கள் இலகுவில் முறியும்.

எப்பிராயத்திலும் எலும்பு முறியக்கூடியதாய் இருக்கும்..முதிர்வயதானவர்களுக்கே பெரும்பாலும் முறிவு ஏற்படுவதாகும். இளம்பிராயமானவர்களுக்குப் பெரும்பாலும் நடுவிலும், முதிர்வயதானவர்களுக்கு அந்தத்தலைகளிலும் முறியாது. இளம்பிராயமானவர்களுக்கு எலும்பு பெரும்பாலும் குறும்னவாகவும் முதிந்தவர்களுக்கு சரிவாயும் முறியும். காணாக்காரணத்தினால் சிலருக்கு எலும்பு வலிய முறியும். இவ்விதமான முறிவு மேகரோகம், புற்றுநோய் உள்ளவர்களில் என்புகள் முறிவடையும்.

எலும்புகள் முறியும் போது சில முறிந்த இடத்தில் இருக்கும். சில ஒன்றுக்குள் ஒன்று சொருகுப்பட்டிருக்கும். சில துண்டுகளாக முறிந்திருக்கும். சில முறிந்து காயங்களை ஏற்படுத்தி அக்காயமும் முறிவும் ஒன்றொடொன்று சம்பந்தப்பட்டிருக்கும். சில முறிந்து முறிவிலும் அதிகமான சேதத்தை வேறு முக்கியமான உறுப்புக்களில் உண்டுபண்ணும். சில முழுதும் முறிந்தும் வெடித்துமிருக்கும்.

சில முறிவுகள் எலும்புக்குட்பாடாய்ச் சம்பவிக்கும். இவ்வகையான முறிவுகளில் அருகிலுள்ள உறுப்புகளுக்கு யாதுமொரு பாதிப்பும் ஏற்படாது. இது இளம்பிராயத்தவர்களுக்கு பெரும்பாலும் ஏற்படும். தாக்கப்பட்ட இடத்தில் இம்முறிவு உண்டாகும். சில முறிவுகளில் எலும்புகள் ஒரு பக்கமாகச் சரிந்திருக்கும். ஒரு பக்கத்தாக்கத்தால் இம்முறிவு உண்டாகும். இது வெகுதூரத்திற்கு எலும்பில் ஓடியிருக்கும். குறுக்குப்பாடான முறிவிலும் மிகுந்த மோசமானதாகவிருக்கும். இம்முறிவினால் முறிந்த உறுப்பு குறுகிப்போகக்கூடியதாகவிருக்கும். இவ்வூறு வாலிபத்திலும், முதிர்விலும் பெரும்பாலும் ஏற்படும்.

***குணம்:-*** சாங்கம் மாறுதல், சுபாவம் தப்பி அசைதல், அராத்துப்படுதல். என்னும் 3 முறிவுக்கு விசேட குணங்கள

***சாங்கம் மாறுதல்:-*** முறிந்த அங்கம் நிலைபேறுவதால் வளைந்தாவது, குறுத்தாவது சாங்கம் மாறியிருக்கும் முறிவும் எலும்புகளிற் சில அவைகளை முறிவித்தாக்கினால் நிலைபேறும். இதை மூக்கென்புகள் அடிபட்டுடைந்து சரிந்திருப்பதைக் காணலாம். முறிந்த உறுப்புகளுக்கு கீழிருக்கின்ற உறுப்புக்களின் பாரத்தினால் நிலைபெறும். முறிவின் சாயலுக்கும் முறிந்த நிலையத்துக்கும் பேசியின் இயக்கத்திற்கு தக்கதாய் நிலைபேர்ந்து முறிந்த எலும்பு வளைந்தும் வழுவியும் ஏறிட்டும் புரண்டும் நிற்கும். முறிந்த எலும்பு பெயர்ந்து வளைந்தால் அவ்வளைவு முறிந்த எலும்புக்கு பாதகமானது. தொடைஎலும்பு முறியும்போது அதன் பின்பக்கத்திலும் அதன் பக்கத்திலுள்ள பேசிகள் குறுகி முறிந்த எலும்பை கூட்டியிருப்பதால் அது அவ்வளவுக்கு சரிந்து முற்பக்கத்திலும் அடைத்திருக்கும். இவ்வித பெயர்ச்சி எலும்புச்சரிவையும் துண்டந்துண்டாயும் முறியும் போதுண்டாகும் அந்தக்கேடு மிகுதியாய் தோன்றாது. எலும்பு ஏறிட்டுப் பெயரும் பொழுது முறிந்த உறுப்பு குறுகியாகிலும் நெடுத்தாகிலும் இருக்கும். முறிந்த எலும்பு ஒன்றின் மேல் ஒன்று ஏறிட்டுக் கொள்வதினாலாவது ஒன்றுக்கொன்று கடாவிக் கொள்வதனாலாவது உறுப்புக் குறுகில் முறிந்த எலும்பின்

கீழ்த்துண்டம் உறுப்பின் பாரத்தினால் பதிய இழுபடுவதானாலும் மேற்றுண்டம் பேசிகளின் இயக்கத்தினால் மிதக்க இழுபடுவதனாலும் இத்துண்டங்கள் குலைந்து உறுப்பு நீளம் குறுகும். பேசிகள் குறுகிய முறிந்த கீழ்ப்பகுதியை திருகுவதினால் அது பெயர்த்து புரளும். இயல்பாக தொடையை புறவளமாக புரட்டும். பேசிகளை அவ்வெலும்பு கழுத்தில் முறியும் போது கீழ்ப்பகுதியை புறவளமாகப்புரட்டும்.

***சுபாவம் தப்பி அசைதல்:-*** எலும்பு இயல்பாக அசையாத இடத்தில் அசைவுண்டாவது முறிவு என்பதற்கு தீர்க்கமான அத்தாட்சியாகும். சிலருக்கு முறிந்த எலும்புத்துண்டங்கள் ஒன்றுக்குள் ஒன்று கடாவுப்பட்டு அசைவற்றிருக்கும் அதனால் எலும்பு முறிவில்லையென்று தீர்மானிக்கக்கூடாது.

***அராத்துப்படுதல்:-*** முறிந்த அந்தலைகளை ஒன்றொடொன்று உரஞ்சும் போது அராத்தும் சத்தம் கேட்கக்கூடியதாகவும். உணரக்கூடியதாகவும் இருக்கும். முறிந்த என்புத்துண்டுகள் ஒன்றோடொன்று தொடுத்தாற் போலும் அசையக்கூடியதாகவிருக்கும் பொழுது இவ்வராத்துதல் உணரப்படும். முறிந்த எலும்பின் மேற்துண்டை உறுதியாககப்பிடித்துக் கொண்டு உறுப்பின் கீழ்வளத்தை புரட்டிப்பார்க்க சுபாவம் தப்பி அசைவது விளங்கும். முறிந்த அந்தத்தலைகளை சந்திக்கத்தக்கதாக கீழ்த்துண்டை இழுத்து முறிந்த இடத்தை ஒரு கையால் பிடித்துக் கொண்டு மற்றக்கையால் உறுப்பை ஆட்ட எலும்பு அராத்துவது விளங்கும். இக்குணங்களின்றி முறிந்த உறுப்பில் வேதனையும், வீக்கமும் உண்டாகும். முறிந்த எலும்பில் ஊறுதல், ஒரு காயம் எவ்வகையாக ஊறி ஆரோக்கியப்படுமோ அவ்வளவாக முறிந்த எலும்பும் ஊறி ஆரோக்கியப்படும். முறிந்த எலும்பில் ஆரம்பத்தில் அசையக்கூடியதாகவிருக்கும். இரத்தம் சூழ்ந்து காயங்கள் இருக்கும். 10-14 நாட்களில் இவ்விரத்தம் வற்றிப்போக முறிவுக்குள்ளதாயிருக்கும் எலும்பிலும் அதனுள் வெளியுறை மற்றும் வைப்புக்களிலும் நல்லிரத்தத்தைச்சுரந்து முறிந்திருக்கின்ற

பொல்லங்களிலும் அவைகளின் சுற்றுப்புறங்களிலும் 'புனிதசம' எனும் ஒருவித பசை நீரைக்கக்கி விடும். அப்பசைநீர் முறிந்த எலும்பை ஒன்றாகப்பிடித்து சற்றுச்சற்றாய் இறுகி 3 கிழமை முதல் 4 கிழமை வரையும் ஒன்றைப்பிடிக்கக்கூடிய உரப்புக்கொள்ளும். இருந்தும் இவ்வொட்டு இலகுவாக விட்டுப்போகக்கூடியது. முறிந்த எலும்பிலும் அம்முறிவுக் கடுக்காயிருக்கும் அதன்சவ்வுறைகளிலும் மற்றும் வைப்புக்களிலும் நின்று கக்கின 'புனிதசம்' எனும் இப்பசைநீர யாவும் சற்றுச்சற்றாய் எலும்பாகி 6 கிழமை முதல் 8 கிழமைவரைக்குள் அம்முறிவை உரப்பாய் ஒற்றப்பண்ணும். ஆயினும் இத்தருணத்தில் முறிந்த எலும்பின் அந்தலைகள் இரண்டும் ஒன்றுடன் ஒன்று பொருந்தாதிருக்கும். உறையாகச்சுற்றிப்பிடித்திருக்கும் எலும்பினடி மொக்கை பொருத்து விட்டுப்போகும். முறிந்த பொல்லங்களுக்கிடையில் எலும்பூறிப்பிடிக்க 2 மாதம்வரை செல்லும். அது ஊறிப்பிடித்தவுடன் மேலும் குறைவாகப் பிடித்திருந்த எலும்பு சற்றுச்சற்றாய் வற்றி குறைந்து போகும்.

எலும்பு முறிந்த இடத்தில் காயங்கண்டு அம்முறிவோடு சம்பந்தப்பட்டிருக்கும் முறிந்த பொல்லங்களை கூட்டிப்பிடிப்பதற்கு உபயோகமாய் அவயவங்களை யாதொன்றும் உண்டுபடாமல் முறிந்த அந்தலைகள் இரண்டினதும் மாத்திரம் இருந்து தசையரும்புகள் வளர்ந்து எலும்பாகி அவ்வந்தலைகளை ஒட்டப்பண்ணும். இவ்வகையாக இது ஊறி ஆரோக்கியப்பட 4 மாதங்கள் செல்லும். கபாலஎன்பு, முள்ளந்தண்டுச்சில்லு, தொடைஎலும்பின் கழுத்து என்பவற்றில் முறிவு ஏற்படும் போது அவைகளைச்சுற்றி என்புண்டாகி அவ்வெலும்பு பொருந்தாது. முறிந்த பொல்லங்களைச் சரிவரச்சந்திக்க வைக்கத்தக்கதாய் வைத்தால் 2-3 மாதத்தில் அவைகளுக்கிடையில் எலும்புண்டாகிப் பொருத்தும். கபாலஎன்பிலாவது அதன் தன்மையுடைய வேறு என்புகளிலாவது ஒரு துண்டு எடுபட்டு நீக்கமுண்டாகில் அந்த நீக்கத்தை எலும்புண்டுபட்டு அடையாமல் அதற்கிடையில் ஊறும். 'புனிதசம்' என்னும் பசைநீர்சவ்வுப்படலமாகி அதனீக்கத்தை அடைக்கும்.

*பிரயோகம்:-* முறிந்த எலும்பு பொருந்தி ஊறும்படி சந்து செய்வதும், யாதொரு கேடும் உண்டாகாமல் பாதுகாத்துக் கொள்ளும் பிரயோகத்தின் நோக்கங்கள் ஆதலால் முதலாவது முறிந்த உறுப்பை அசையப்பண்ணும் பேசிகள் வைத்திருக்கக்கூடிய நிலையில் அவ்வுறுப்பை வைத்திருக்க வேண்டும். ஆக முன்பின் மேலந்தலை முறிந்தால் அவ்வென்பைத் தொடுத்திருக்கும் பேசி புயத்தின் முற்பக்கத்தில் நுகைத்திருக்கத்தக்கதாய் முழங்கையை மடக்கியும் தத்தின் என்பின் மேலக்தலை முறிந்ததால் எலும்பைத் தொடுத்திருக்கும் பேசி புயத்தின் பின் பக்கத்தில் நுகைந்திருக்கத்தக்கதாய் முழங்கையை நீட்டியும் வைக்கப்படும். இவ்வாறு மற்றய முறிவுகளுக்கும் செய்ய வேண்டும்.

இரண்டாவது முறிந்த எலும்பைச்சரிவர சந்து செய்ய வேண்டும். அதற்கு முறிந்த என்பு சரியான நீளத்திற்கும் சுபாபசாயலுக்கும் வர அவ்வுறுப்பின் மேலந்தலையைத் திடமாய்ப்பிடித்துக் கொண்டு கீழ்த்தலையை இழுத்து வைக்க வேண்டும். இழுக்கும் போது தசைகளில் உண்டாகியிருக்கும் வலிப்பு அதிகரிக்குமாகையால் பதுமையாகவும் படிப்படியாகவும் இழுக்க வேண்டும்.

மூன்றாவது வீக்கம் கொள்ளாமலும் பேசிகள் குறுகி எலும்பை புரட்டாமலும் முறிந்த என்பைச் சீலையாற் சுற்றி வைக்க வேண்டும்.

நான்காவது முறிந்த உறுப்பின் சுபாவ நீளத்தையும் சாயலையும் காத்துக் கொள்ளவும். முறிந்த இடம் அசையாமல் தடுக்கத்தக்கதாய் ஏற்ற தப்பை போடவேண்டும். இதற்கு முறிந்த உறுப்பிற்கு இணையான உறுப்பின் நீள அகலத்தை அளந்து அந்தப்பிரமாணமாய்த் தப்பைகள் சீவி மெத்தையிட்டு முறிந்த உறுப்புக்கு வைத்து சீலையாற் சுற்றிக் கட்ட வேண்டும்.

சுற்றும் சீலை 3-4 விரலிடை அகலமும் சுற்றப் போதிய நீளமுள்ளதாய் இருக்க வேண்டும். சுற்றும் போது ஒத்த செப்பமாகவும், முதல்முறை சற்றே நுகைவாயும் சுற்ற வேண்டும். தப்பைகளுக்குட்பட ஒரு காலத்திலும் சீலையால் சுற்றப்படாது. அப்படிச்சுற்றுவது பிரயோசனமும் இல்லை. மாற்றிச்சுற்றின் உறுப்பு இறுகி வேதனையாவது, விறைப்பாவது உண்டுபண்ணும். அந்தத்தலை நீலம் பாரிக்கும் உடனே அச்சுற்றைக் கழற்றிவிட வேண்டும். முறிவுக்குச் சீலை சுற்ற முன்னும் சுற்றின சீலையை கழட்டிச் சுற்றும் சமயத்திலும் முறிந்த உறுப்புகளுக்குச் சவர்க்காரமிட்டு வென்னீரால் கழுவ வேண்டும். தப்பைகள் மரத்தினாலும், தகட்டினாலும், தடித்த கடதாசியினாலும், கற்றப் பேடச் என்னும் பிசினாலும் பெரும்பாலும் செய்யப்படுகிறது. தப்பை உறுப்பினுள் புதையாதபடி உறுப்பிலும் சற்றே அகலமாகவும் முறிந்த எலும்பு சந்தித்திருக்கும் பொருத்துகள் இரண்டையும் அணைத்துக் கொள்ளக்கூடிய நீளமானதாய் இருக்க வேண்டும். தொடைஎலும்பு முறிந்தால் முழந்தாலையும், காற்குழைச்சையும் அணைத்து திடப்படுத்திக் கொள்ள வேண்டும்.

*மண்டவேலிதம்:-*

தப்பைகளையன்றி தடிப்பான கஞ்சியுஞ் சீலையில் தோய்த்து நெரிவுக்குச் சுற்றப்படும். அக்கஞ்சி காய்ந்து முறிந்த உறுப்புகளுக்கு மிகுந்த இலேசாகவும் உருப்படியான ஆதாரமாயிருக்கும். ஆதலால் நோயாளி தொடை கால் முறிந்தாலும் ஒரு படுக்கையாக படாமல் எழுந்திருக்கவும். காற்றுப்பிடிக்க ஏதுவாகி சரீரத்தை பாதுகாத்துக் கொள்ளவும்.

சீலையிற் கஞ்சியூட்டிச் சுற்றி முறிந்த உறுப்பு முற்றையும் சூழவர மெதுவாக பஞ்சினால் சொற்பமாய் மூடி அதன் பிறகு முறிந்த எலும்புக்கு மேலும் கீழாய் உள்ள பொருத்துக்களை திடப்படுத்தக்கூடிய நீளமாய்க் கடதாசிப் பலகையிலே தப்பைகளை அறுத்துக் கஞ்சியூட்டி வைத்து அதன் பிறகு வேறு ஒரு சீலையால் சுற்ற வேண்டும். கடைசியாக இடும் இச்சீலையின் உட்பக்கத்திற்கு மாத்திரம் கஞ்சி தடவ வேண்டும். இப்பிரயோகம் செய்யும் போது எலும்பு வழுவி உறுப்புக்

குறுத்துப் போகாதபடி ஒரு கையால் அதை இழுத்துப்பிடித்துக் கொள்ள வேண்டும். கஞ்சிச்சீலை காய்ந்து பெலப்புக் கொள்ள குறைந்தது 2 நாட்கள் செல்லும். அதுவரையில் உறுப்பின் நீளம் குறையாமலும் சாங்கமும் மாறாமலுமிருக்க மரத்தப்பை வைத்துக்கட்ட வேண்டும். சீலை நன்றாகக் காய்ந்த பின் மரத்தப்பையைக் கழற்றித் தொடை, கால் முறிந்த நோயாளியாகில் கவைத்தண்டமிட்டுக் கொண்டு நடக்கும்படி விட வேண்டும்.

கஞ்சிப்பற்றுக் கழன்று ஈடாட்டம் தோன்றில் அதை வெட்டித் தப்பையை ஒடுக்கிச் சீவிப் பின்பு நாடாக்களால் இறுக்கிக் கட்ட வேண்டும். தப்பையைச் சீவும்படி அதை உறுப்பை விட்டு கழற்ற வேண்டியதில்லை. முறிவோடு காயமுண்டாகியிருக்குமானால் அக்காயத்திற்கு நேராகச் சீலையில் துவாரம் அறுத்து அதன்வழியாக அதற்கு மருந்திட வேண்டும். இப்பிரயோகம் அதிகநயப்பானதாகிலும், வீக்கம் அதணமாய் உண்டாகக்கூடிய சமயத்தில் இது தகாது. சிலர் ஊறு கண்டவுடன் இதைப்பாவித்து வருகிறார்கள்.

முறிவு நிமித்தம் சோகம் உண்டானால் ஆளைச்சுருட்டி விடக்கூடிய மருந்துகள் கொடுக்க வேண்டும். சலம் போகாமல் தடைப்பட்டு நின்றால் குழற்கம்பி விடவேண்டும். பேசிகளில் துடிப்பும் உபாதியும் உண்டானால் அபின் சேர்ந்த மருந்துகளும் விரேசனமருந்துகளும் கொடுக்க வேண்டும். ஏற்குமாயிருந்தால் முறிந்த இடத்திற்கு தண்ணீர்ச்சீலை இடவேண்டும். தாபிதம் இருந்தால் அட்டை விடவேண்டும்.

உறுப்பு வீங்கும் போது சுற்றின சீலைகளையும் தப்பைகளையும் இழக்கிவிட்டு வீக்கம் தணிந்த பின்பு முறிந்த அத்தலைகள் சரியாக நிற்கத்தக்கதாக இறுக்கிக்கட்ட வேண்டும். எலும்பில் யாதொரு பெயர்ச்சி கண்டால் உடனே நேர்படுத்திக் கொள்ள வேண்டும். யாதுமொருமிடத்தில் நோக்கொள்ளத்தக்கதாக தப்பைகள் அமத்தாமலும் சுற்றின சீலைகள் வெட்டாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும். எலும்பு கோணலாக பற்றி

பொருந்தினது எனக்கண்டால் அதை நிமித்தி சரிசமமாக்க வேண்டும். முறிந்து 4 கிழமை செல்லமுன் கோணலாய்ப் பொருந்திய எலும்பை இலகுவாக நிமித்தலாம். 6மாதம் சென்றும் நிமித்தியிருக்கிறார்கள்.

***என்பிசைவின்மை:-***

முறிந்த என்புகளிற் சில ஊறிப்பிடியாமல் முறிந்த எலும்பை பொருந்தும்படி ஊறும் புனிதசம் எனும் தசைநீர் ஒருவிதமான சவ்வாகி அச்சவ்வினால் முறிந்த அந்தலைகள் தொடுக்கப்பட்டிருக்கும் அல்லது சாங்கமாய் முறிந்த அத்தலைகள் நித்தை ஊறுகிற சவ்வினால் மூடப்பட்டு விசியினால் பந்திக்கப்பட்டு குழச்சாகும் இக்குழச்சாந்து தசைகளின் இயக்கத்துக்குத் தக்கதாய் நீட்டவும் மடக்கவும் கூடியதாயாவது இருக்கும். சந்து செய்த எலும்பை அடிக்கடி அசைப்பதனாலும் முறிவுக்கிடையில் தசை போய் அகப்படுவதனாலும் எலும்பூறுவதற்கு போதிய இரத்தம் செல்லாதிருப்பதனாலும் கசரோகம், வாதரோகம், மேகரோகம், புற்றுரோகம் என்பவைகளினால் துர்பலப்பட்டு கீவாதார தத்துவங்களால் குன்றிப்போவதனாலும் இப்பேதம் உண்டாகும்.

இதற்கு முறிந்த எலும்பின் அந்தலைகள் நெருங்கியிருக் கத்தக்கதாய் அவ்வுறுப்புக்கு தப்பை வைத்துக்கட்டியாவது, சீலையில் தடித்த கஞ்சி ஊட்டிச்சுற்றியாவது வைக்க வேண்டும். 2 மாதம் வரைக்கும் இப்பிரயோகத்தைச் செய்தும் காரியம் சித்திக்காதிருந்தால் முறிவைச்சுற்றி சொற்ப தாபிதம் எழும்பும்படி முறிந்த எலும்பின் இருதலைகளையும் ஒன்றோடொன்று உரஞ்சி மறுபடியும் தப்ப வைத்துக்கட்ட வேண்டும். இதற்கு 2மாதம் வரைக்கும் பார்த்து பலன் கிடைக்காவிட்டால் முறிந்த எலும்பின் அத்தலைகளுக்கிடையில் பட்டுநூல் கோர்த்துக்கட்டி 10 நாட்களுக்கு விட்டு பின் கழற்றிவிட்டு தப்பைகள் வைத்துக் கட்ட வேண்டும். இதற்கும் பலன் கிடைக்காவிட்டால் முறிந்த இடத்தைக்கீறி எலும்பின் அத்தலைகளைச்சீவிப் பின்பு பொருத்திப்பிடித்துத் தப்பை வைத்துக்கட்ட வேண்டும். வெட்டும்

போது முறிந்த பொல்லங்களுக்கிடையில் தசை அகப்பட்டிருக்கக் கண்டால் அதை அறுத்து எடுத்துவிட வேண்டும். எலும்பை வெட்டி பொருத்துவதனால் அதிகஅபாயம் ஏற்படுமாகையால் சிலவேளை அத்தலைக்குக்கிட்ட எலும்புத்துரப்பணத்தால் திரும்பத் திரும்ப துளைப்பதனால் சித்தியானதுண்டாம்.

***மிசிரமுறிவு:*** எலும்பு முறிந்திருக்குமிடத்து காயம் கண்டு அம்முறிவும் காயமும் ஒன்றோடொன்று தொடுத்திருத்தால் அது மிசுரமுறிவு எனப்படும். இவ்வூறு எலும்பு முறிவுக்கு ஏதுவாகவிருந்து தாக்கினாலும் முறிந்த எலும்பின் முனை முனை தோலை பீறுவதானாலும் முறிந்த இடத்தில் தோல் அழுகி புண்படுவதானாலும் உண்டாகும். இதனால் உண்டாகும் ஊறு ஆரோக்கியமானவர்க்கு நெடுநாட் செல்லுமாகையால் அதனால் உண்டாகும் சோகம், தாபிதம், வீச்சு, காய்ச்சல் என்பனவற்றினால் சிலருக்கு மோஷம் உண்டாக்கும். ஆதலால் இவ்வகை ஊறுபட்ட உறுப்பை பாதுகாக்க வேண்டுமென்று ஆரம்பத்திலே தீர்மானிக்க வேண்டும். இதற்காக ஊறுபாட்டின் விஸ்தாரத்தையும் ஆவ்வூறை நிவர்த்தி செய்வதற்கு நோயாளியின் பலத்தையும் மதிப்பீடு செய்யவேண்டும். எலும்பு மிகுதியாக சின்னாபின்னப்பட்டிருந்தாலும் முறிவு யாதொரு பொருத்தையும் விசேடமாக முழந்தாட் பொருத்தைப்பற்றி இருந்தாலும் தசைகளும், தோலும் விஸ்தாரமாக நசுக்குண்டானாலும், பீறு உண்டாகியிருந்தாலும், ஊறுபாடு உண்டாகமுன் எலும்பின் நோயினாலாவது, ஊறுபட்டு உண்டான இரத்தப்பெருக்கினாலாவது நோயாளி துர்பலப்பட்டிருந்தால், ஊறுபாட்டின் நிமித்தம் உண்டான நோ நெடு நீண்டதுமாக இருந்தால் அங்க சேதனம் செய்ய வேண்டிவரும். இவ்வாறு மேலே கூறிய குணங்கள் ஒன்றுமில்லாது இளம்பிராயருக்கும, தேகஆரோக்கியம் உள்ளவர்களுக்கும் நோய் உண்டாகில் இதற்கு காய்ச்சலும்,தாபிதமும் ஏற்படமுன்னர் அங்கசேதனம் செய்ய வேண்டும்.

முறிந்த உறுப்பை காக்கும்படி தீர்மானித்தால் அவ்வுறுப்பை வசதியாக வைத்து முறிந்த என்பை சந்து செய்ய

வேண்டும். சந்து செய்யக் கூடாதபடிக்கு எலும்பு முனையால் புறப்பட்டு நின்றால் தசைக்கு சேதம் வராமல் பாதுகாத்து அம்முனையை அரிய வேண்டும். யாதொரு எலும்பு சின்னபின்னப்பட்டிருந்தால் தொடர்பு விட்ட துண்டுகளை உடனே களைந்த விடவேண்டும். களையாது விடின் தாபிதம் மிகுந்துண்டாவதன்றி ஈர்ப்பும் நெடுக நிற்கும். எலும்பை சந்து செய்தபின்பு வெளிக்காயத்தை ஆரோக்கியப்படுத்தல் வேண்டும். காயமும் முறிந்த எலும்பின்முனை பீறி காயம் பெரிதாகவிருந்து யாததொரு பொருத்தைப்பற்றியிருந்தால், அதிகம் சிதறியிருந்தால், தண்ணீர்ச்சீலையிடவும். பின் பசுமையான மெத்தையிட்டு தப்பை வைத்து சீலையால் சுற்றிக்கட்ட வேண்டும். உறுப்பு முழுதும் அசையாதபடி காயத்திற்கு மருந்திடத்தக்கதாய் இத்தப்பையில் துவாரங்கள் அறுத்துக் கொள்ள வேண்டும். காயமும், வீக்கமும் உண்டாகிற் சுற்றின சீலையை நுகைய விட்டுத் தண்ணீர்ச்சீலை இடவேண்டும். தேகஅழுற்சி நீங்கும்படி ஆகாரத்தை மட்டுப்படுத்தி இடைக்கிடை சுகவிரேசனம் செய்வித்து அபின் சேர்ந்த மருந்துகள் கொடுக்க வேண்டும். சீழ் கொள்ளத் தொடங்கியவுடன் காயத்திற்கு மருந்து போடும் போது பதமாய் பிதுக்கித் தள்ளிச் சீலை நிற்குமிடத்தில் மெத்தை வைத்துக் சீலையால் சுற்றிவர வேண்டும். இத்தருணத்தில் சீலைகள், தப்பைகள் யாவும் அழுக்கடையாதபடி கவனமாயிருக்க வேண்டும். நோயாளியை பலப்படுத்த வேண்டும். இதற்கு சிறந்த ஆகாரங்களைக் கொடுக்க வேண்டும். இதிலும் சீழ் குறையாவிட்டால் அங்கசேதனம் செய்யவும். காயம் குறைந்து சீழ் வெளிவருவது குறைந்தால் கழி கட்டுவதை நிறுத்தி தண்ணீர் சீலை கட்ட வேண்டும். எலும்பூறி சற்றே பலப்பட்டவுடன் தேர்த்தப்பை வைத்துச் சீலையாறட கஞ்சியூட்டிச் சுற்றி நோயாளியைப் படுக்கை விட்டெழுந்து உலாவும்படி பண்ண வேண்டும்.

எலும்பு முறிந்து காயம் கண்டு அவை இரண்டும் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும் போது உண்டாகிற தீங்கு முறிந்த இடத்தில் வடிந்த இரத்தம் வெளிக்காற்றுப்பிடித்துப் பதனளிகிறதால் என்றும் இப்பதனழிவைக் கட்டுப்படுத்த

காபோலிக்கமிலம் இட புண் ஆறும். காபோலிக்கமிலம் 1பங்கு 5. நல்லெண்ணெய் 1பங்கு சேர்க்கவும். மிசுரமுறிவுக்கு இதை இடும் போது இரத்தத்தோடு சேர்ந்து அதன் காரம் குறைந்து பிசின் போலாகி காய்ந்திறுகி வைரமாகும். இவ்வசறு இரத்தத்தை பதனழிய விடாமல் காத்துக்கொள்ளும். இதனால் காயம், சீழ் இரண்டும் விரைவாக ஆறும்.

***நாசி என்பு, கவுவென்பு, மேற்றாடைஎன்பு:-***

இவை பலாத்கர அடிகாயம் இவற்றால் முறிவு உண்டாகும். அவற்றுள் நாசி என்பு அதிகம் மெல்லியதாகவும்,மிதப்பதாக இருப்பதனால் பெரும்பாலும் முறிந்து பாதிப்புறும். முறிந்த எலும்பு நிலையம் விட்டு வருவதனால் சோதனி எனும் கப்பியை நாசிக்குள் விட்டு எலும்பை நிலையத்திலிருந்து எடுத்துவிட வேண்டும். நாசியிலிருந்து இரத்தம் மிகுதியாகப் பெருகினால் நாசிக்கு எண்ணெய்ச்சீலை விட்டு அடைக்க வேண்டும். முறிந்த எலும்பில் சிராய் கிழம்பித் தோலைப்பீறியிருந்தால் அச்சிராயை எடுக்க வேண்டும். வீக்கம், தலைநோ, இரத்தக்கண்டல் உண்டானால் அட்டை விட்டு விரேசணம் பண்ணுவித்து தண்ணீர்ச்சீலை இடவேண்டும். சீழ் கட்டினால் காலதாமதம் பண்ணாமல் சத்திரமிட்டு சீழை அகற்றிவிட வேண்டும். நாசியைப பிரிக்கும் என்பு ஏறிட்டு மூளையை அமர்த்துங் குணங்கண்டால் அவ்வெலும்பைச் சற்றே முன்னுக்கு இழுத்துவிட வேண்டும். கவுஎன்பும், மேற்றாடைஎன்பும் முறிந்தால் பெரும்பாலும் முறிந்த இடத்திற் காயம் காணும். பற்கள் உள்ள பகுதியே பெரும்பாலும் முறிந்து பற்கள் கழன்று போகும். தங்கக்கம்பியால் பற்களைக் கட்டிவிடுவதே பிரயோகமாகும்.

***கீழ்த்தாடை என்பு முறிவு:-***

பலமான அடிபடுவதால் மேவாய்க்கும் காதடிக்குமிடையில் வேட்டைப்பல்லுக்குச் சமீபமாக இவ்வெலும்பு பெரும்பாலும் முறியும். குழந்தைகளுக்கு மோவாயின் நடுவிலும் முறியும்.

***குணம்:-*** முறிந்த பொல்லங்கள், அராத்தும் பற்களின் நிரையும் அலகின் வளைவும் ஒழுங்கீனப்பட்டிருக்கும். முரசு கிழிந்து

இரத்தம் பெருகும். உமிழ்நீர் வடியும். நோகும், வீங்கும. அலகாட்டக்கடினமாயிருக்கும். மோவாய்க்கு எவ்வளவு கிட்ட எலும்பு முறிகிறதோ அவ்வளவுக்கதிகமாக முறிந்த பொல்லங்கள் நிலை பெயர்ந்திருக்கும்.

***பிரயோகம்-*** ஒரு துண்டுக் கடதாசிப் பலகையை வெந்நீரில் நனைத்திளக்கி அலகுக்குச் சரியாகப் படியப்பண்ணி பின்பு 135 செமீ நீளமும் 12செமீ அகலமுமான ஓர் சீலைத்துண்டை எடுத்து அதன் நடுவில் 20செமீ இருக்கவிட்டு இரு தலையையும் நெடும்பாடாகக் கிழித்து அதன் நடுவில் ஒரு பொட்டுக்கிழித்து அப்பொட்டினுள் மேல்வாயை வைத்து கீழ்த்தாடையை மேற்றாடையோடு எடுத்து கீலங்களில் இரண்டை உச்சந்தலையிலும் மற்ற இரண்டைப் பிடரியிலும் கட்டிவிட வேண்டும். பற்கள் ஈடாடினால் பட்டுநூலாவது, தங்கக்கம்பியாலாவது உரப்பாய் இருக்கிற பற்களோடு சேர்த்துக்கட்டிவிட வேண்டும்.

குறித்த இடத்தில் பற்களில் யாதொன்று விழுந்து போனால் இரண்டு கொடுப்புக்களிலுமுள்ள பட்டடைப் பற்களுக்கிடையில் இரண்டு மெல்லிய தடி ஆபபக்குமிடையில் சிலருக்கு விழுந்த பல்லு போய் அகப்பட்டு அம்முறிவைச் சந்திக்க விடாதிருக்கும். அப்படி உள்ளதாவென பார்த்துக் கொள்ள வேண்டும். 15 நாட்களுக்கு நோயாளியை வாய்திறந்து பேசவும், தண்ணீா, கஞ்சி, பால், இறைச்சி முதலான ஆகாரங்களேயன்றி வேறு யாதொன்றும் கொடுக்கக்கூடாது. 5-6 கிழமைகளில் எலும்பூறி அரோக்கியப்படும்.

முறிந்த பொல்லங்கள் அதிகம் நிலை பெயாராமலிருந்தால் கீழ்வாய்ப்பல்லு மேல்வாய்ப்பல்லில் முட்டத்தக்கதாக வாயை இறுக்கி மூடப்பண்ணிக் கொண்டு ஒரு சீலையை மடித்து மெத்தை ஆக்கி அலகுக்கு கீழே வைத்து 450செமீ நீளமும் 5செமீ அகலமுள்ள சீலை எடுத்து அலகுக்கு கீழே தொடுத்து தலைக்கு மேலாலே வரமாறிப் பிடரியிலும், நெற்றியிலும் பொறுக்கத்தக்கதாய்

தலையைச்சுற்றி வர 4-5முறை சுற்றி கடைசியாக கீழ்ப்பிடரியிலும் மோவாயிலும் சீலை பிடித்திடத்தக்கதாய் 5,6 முறை சுற்றிக்கட்டி வைத்தல் நன்று.

450 செமீ நீளமும் 10செமீ அகலமும் கொண்ட பொறை எனும் மெத்தைச்சீலையை எடுத்து வேலிதத்தின் ஒரு தலைப்பை பிடரென்பிலுள்ள புடைப்புக்குச் சற்றே கீடப்பட வைத்து இடது பக்கத்துப் பிந்திகை என்பு வழியாய் உச்சந்தலையைச் சுற்றி வலக்கன்னத்திற்குக் கொண்டு போய்த் தாடைக்கு கீழாக இடது கன்னத்தால் உச்சந்தலையிலேறி வலப் பித்திகை என்பு வழியாக முதற்தொடங்கிய இடத்துக்கு கொண்டவந்து பின் தாடைஎன்பின் இடப்பக்கத்தைச்சுற்றி வலப்பக்கத்தால் எடுத்துப் பிடரிக்கு கொண்டு வந்து திரும்பவும் முன்சுற்றினது போல சீலை முடிகிற வரைக்கும் சுற்றித் தலைப்பைத் தைத்து விடவும்.

***செத்துரு என்பு முறிவு:-*** புயமாவது, தோள்மூட்டானது அடிபட விழுவதனாலும் எலும்பின் நடுப்பகுதியில் பெரும்பாலும் முறியும்.

***குணம்:-*** எலும்பு முறிந்திருக்கும் பக்கத்திற்கு புயம் உயர்த்தமுடியாமலிருக்கும். தோள் முன்னுக்கு இறங்கி விலாவோடு அணைந்திருக்கும். முறியாத பக்கத்திலுள்ள நெஞ்சென்புக்கும் தோட்பட்டைஎன்புக்கும் உள்ள தூரத்திலும் முறிந்த பக்கத்திலுள்ள தூரத்திலும் குறைந்திருக்கும். நெஞ்சென்போடு தொடுத்திருக்கும் முறிந்த என்பின் துண்டு *நிலைபெயராதிருக்கும்.* தோள்மூட்டிறங்கி இருப்பதனால் நிலை பெயர்ந்து போலப்புடைத்திருக்கும். முழங்கையை விலாவோடு அணைத்து தோள்மூட்டை உயர்த்தி ஆட்டும் போது முறிந்த பொல்லங்கள் ஒன்றோடொன்று அரத்தும்.

***பிரயோகம்:-*** ஆப்புப்போல் ஒரு மெத்தை 12செமீ நீளமும் 10செமீ அகலமும் தடித்த பக்கம் 6செமீ கனமுள்ளதாகச் செய்து அதன் தடிப்பான பக்கத்தைக் கமக்கட்டுக்கு கொடுத்து தோள்மூட்டை உயர்த்திக் கொண்டு தோட்பட்டைக்குக்கீழ்

இடையில் முழந்தாளைத் தொடுத்துத் தோள்மூட்டுக்களை பின்னுக்கிழுத்து முறிந்த எலும்பை சந்து செய்து பின்பு ஒரு சீலைச்சுருளால் தோள்மூட்டுக்களை இச் 8 (Figure eight) சாங்கமாய்ச் சுற்றிக்கட்டி பின்பு முழங்கைகக்கு ஒரு சீலை போட்டு உயர்த்தி கழுத்திற் தூக்கி விடவும். அல்லது தொடக்கத்தில் 2-3 கிழமைக்கு ஒரே படுக்கையாய் படுக்கப் பண்ணுவதும் உபயோகமாய் இருக்கும்.

*வாகென்பு முறிவு:-* இவ்வென்பு முறிவதாயினும் முறியும் காலத்தில் உறைப்பாய் படும் தாக்கினால் பெரும்பாலும் நடுவிலே தெறிக்கும். இதுவுண்டானால் தோள்மூட்டை ஆட்டினால் மிகுந்த உபாதை உண்டாக்கும். தோளின் மேற்பக்கத்தில் ஒரு கையை வைத்து மற்றக்கையால் தோள்மூட்டையாவது இவ்வென்பின் கீழ்ப்பகுதியாவது பிடித்து ஆட்ட முறிந்த எலும்பு அராத்தும். உரப்பான பேசிகள் இதை மூடியிருப்பதனால் பொல்லங்கள் நிலைகுலையாது இருக்கும்.

*பிரயோகம்-* முறிந்த எலும்பு அசையாதபடி பாதுகாக்கும் பொருட்டு நெஞ்சையும் முதுகையும் சுற்றிவர சீலையால் சுற்றி பின்பு முழங்கையை விலாவோடு அணைத்துச் சுற்றிவிட வேண்டும். நெஞ்சறையில் தாபிதங் கொள்ளாமல் இரத்தமெடுக்கவாது, விரேசனமும் பண்ணுவித்துப் போசனத்தையும் குறைக்கவாவது வேண்டிவரும்.

*வாகென்பு கழுத்து முறிவு:-* இவ்வெலும்பு கழுத்தில் முறிவது மிக அபூர்வம். நிலையத்தில் இவ்வென்பு இருக்கிற பலப்பிலும், அது மூடப்பட்டிருக்கின்ற வன்மையும் காரணமாகும். துப்பாக்கிச் சூட்டுக்கு இலக்காகினால் இவ்வென்பு முறியும்.

*குணம்:-* தோள்மூட்டு இறங்கி நிற்கும். புயம் நீண்டிருக்கும். புயத்தின் மேற்பக்கமாய் இருக்கின்ற பேசி கீழுக்கு இழுவுண்டு தட்டை ஆகும். புயஎன்பின் மேற்தலை கமக்கட்டுக்குள் இறங்கி நிற்கும். கை ஒன்றை தோள்மூட்டின் மேல் வைத்துக்கொண்டு தோளைப்பிடித்தாட்ட எலும்பு அராத்துவது விளங்கும்.

***பிரயோகம்:-*** செத்துரு என்பின் முறிவிற்குக் கட்டுவது போற்கட்டி தோள்மூட்டைத் தாங்குவதுமன்றி முறிந்த பக்கத்தில் கமக்கட்டில் ஒரு சீலை போட்டு மறுபக்கத்தில் தோளில் கட்டுப்போட வேண்டும். ஒரு கிழமை வரையில் எலும்பூறி சுகமாகும். ஆரோக்கிய நிலை வரும்படி அட்டைவிட்டு விரேசனம் பண்ணுவித்து வெண்ணீர்ச்சீலை போட்டு நோயாளியை ஓய்வாய் இருக்க பண்ணவேண்டும்.

***கீறுகலிகம்:-***

இது முறிந்தால் கை ஒரு சுமைபோல் பக்கத்தில் தூங்கும். வாகென்பின் முள்ளைத்தடவிப்பார்க்க அது ஒழுங்கற்றுறிருக்கும். முழங்கையை உயர்த்தி புயத்தை ஆட்ட எலும்பு அராத்தும். இவ்விகத்தின் நுணி மாத்திரம் முறிந்தால் சோர்வாதம் கொண்டது போலக் கையை உயர்த்திப்பார்க்க தலைக்கு மேலே உயர்த்த முடியாது.

***பிரயோகம்:-*** புயஎன்பின் மேற்றலை முறிந்த எலும்பை மிதத்திற் தாங்கிப் கொள்ளத்தக்கதாய் முழங்கையை உயர்த்திக் கொண்டு முழங்கையில் ஒரு சீலையை மெத்தையாய் மடித்து வைத்து முழங்கையை சரீரத்தோடு சீலையால் சுற்றிக்கட்டி ஏக்தானத்தில் தூக்கிவிட வேண்டும்.

***கணைவிகம்:***

இது முறிந்தால் கையை முன்னுக்கு தூக்கமுடியாமலிருக்கும். நோயாளி இருமும் போது தோள்மூட்டுக்கும் கிட்ட செத்துரு என்புக்கும் கீழ்ப்பட்ட விரலைக் கொடுக்க முறிந்த துண்டு ஆடுறதும் அராத்துகிறதும் விளங்கும். முழங்கையை முன்னுக்கு தூக்கி வைத்து சரீரத்தோடு அணைத்து சீலையால் சுற்றி கட்டி வைத்தல் நன்று.

***புயஎன்பு முறிவு:-*** இவ்வெலும்பு நடுவில் முறியும் போது பெரும்பாலும் ஒரு பக்கத்துக்கு சரிவாக முறியும். இம்முறிவை பார்த்ததுடன் விளங்கும். முறிந்த உறுப்பு வளைந்தும், குறுத்தும், தாபரமற்றுமிருக்கும். கையால் பிடித்து ஆட்ட அராத்தும். கீழ்

பொல்லம் மேற் பொல்லத்திற்கு அகப்பக்கமாய் மேலுக்கிழுபட்டு நிற்கும். மேற்பொல்லம் சற்றே புரண்டு நிற்கும்.

***பிரயோகம்:-*** தோள் மூட்டில் திடமாகப் பிடித்துக்கொண்டு முழங்கையில் பிடித்திருந்து முறிந்த எலும்பை சந்து செய்து நாலு பக்கம் மெத்தையுள்ள 4 தப்பைகளை தோள்தொட்டு முழங்கை வரைக்கும் நாடாக்களால் கட்டி பின் புயத்தை விலாவோடு இணைத்து கட்டி கடைசியாக முன்கைக்கு தானம் போட்டு முழங்கையை உயர்த்தாமல் தூக்கிவிடவேண்டும்.

***புயஎன்பின் கழுத்து முறிவு:-***

கழுத்தில் ஏற்படும் பலமான தாக்குதலால் இம்முறிவு ஏற்படும். அது புயவென்பின் குழாயினடியில் இருக்கும். கண்களுக்கு மேற்படவிருக்கும். கழுத்திலாவது கழுத்து முறிவதே பெருவழக்கம்.

***குணம்:-*** கையை உயர்த்த முடியாதிருக்கும். தோல் சப்பளிந்திருந்தும் மூட்டு விட்டது போல் பள்ளம் விழுந்திராது. எலும்பின் தலை குறிப்பிட்ட நிலையத்தில் நிற்க முறிந்த அத்தலை கமக்கட்டுக்குள்ளாவது கமக்கட்டின் முன்னாவது போய் புடைத்திருக்கும். எலும்பின் தலையை ஒரு கையால் பிடித்து கீழுக்கு இழுக்க எலும்பு சொந்த நிலையத்திற்கு வரும். எலும்பை ஆட்டி அசைக்க எலும்பு அராத்துவது தெரியும். முறிந்த கை மற்றக்கையை விட குறுத்தருக்கும். முறிந்த எலும்பின் கூர் கமக்கட்டுக்குள் இருக்கும் நரம்புகளைப் பாதித்து அழற்சியாக்குவதால் கையில் மிகுந்த வேதனையும், வலியும் இருக்கும்.

***பிரயோகம்:*** கமக்கட்டுக்கு ஒரு மெத்தை கொடுத்துயர்த்தி எலும்பின் நடுவில் முறியும் போது கட்டுவது போல தப்பை வைத்து கட்ட முன் கைக்கு வைத்து எத்தணம் போட்டு முழங்கையை உயர்த்தாமல் தூக்கி விட வேண்டும்.

***கழுத்து முறிவும் பொருத்து விலகலும்:-*** சிலருக்கு புயவென்புக் குமிழ் தன் கழுத்தையும் விட்டு முறிந்து பொருத்தையும் விட்டு விலகிப்போகும். கமக்கட்டுக்குள் தடவிப்பார்க்கையில் அக்குமிழ் தெரியக்கூடியதாய் முழங்கையில் பிடித்தாட்டும் போது அது அசையாமல் இருக்க காணப்படும்.

குமிழைப் பொருத்திலெடுத்து விடுவது கூடாதாகையால் முறிந்திருக்கும் கீழ்ப் பொல்லத்தின் அந்தலையை பொருத்திலெடுத்துவிட்டுத் தோள்மூட்டிரண்டையும் சீலையால் சுற்றிக் கையை எத்தாணியில் தூக்கி வைத்துத் தாபிதம் தணிந்தவுடன் உறுப்பை ஆட்டியசைத்து வருவதே பிரயோகம். இது ஆரோக்கியப்பட்டாலும் கையை சரியாக உயர்த்தக்கூடா மலிருக்கும்.

***புயவென்புக் கீழ்த்தலை முறிவு:-***

இது பல பேதமாய் முறியும்.

1. பாலவயதானவர்களுக்கு பர்வங்கள் எனும் கணுக்களுக்கு மேற்பட பெரும்பாலும் முறிகிறது. இவ்வாறு முறியும் போது ஆரைஎன்பும், அரந்தி என்பும் கீழ்பொல்லத்தோடு புயத்திற்கு பின்பக்கம் மேலுங்கீழுபட்டுப் பொருத்து விலகினது போலிருக்கும். உறுப்பை நீட்டி இருக்கும் போது அவ்வுறுப்புக்கள் சுபா தோற்றத்தைக் கொள்ளும்.

2. இதன் பர்வங்கள் எனும் கணுக்கால் ஒன்றில் ஏற்படும் முறிவு. இம்முறிவு சிலருக்கு முழுக்கப் பொருந்தும். சிலருக்கு பொருந்தாது.

3. கணுக்கால் இரண்டும் வெவ்வேறாக என்பிலிருந்து பிரியும் முறிவு. இவ்வூறு முழங்கை அடிபட விழுவதனாலும், வேறு தாக்குதலினாலும் உண்டு பண்ணும். இம்முறிவினால் முழங்கைக்குஉண்டான அசைவுவித்தியாசப் படாதிருப்ப

தனாலும், முறிந்த எலும்பு அராத்துப்படுவதனாலும் முழங்கைப்பூட்டு விலகி இருக்கவில்லை என அறிந்து கொள்ளலாம்.

***பிரயோகம்:-*** இம்மூன்றிற்கும் ஒரே வித பிரயோகம் செய்ய வேண்டும். கையை மடக்கித் தலையணை வைத்துத் தாபிதமும் அதற்குண்டான வீக்கமும் தணியும்படி அட்டைவிட்டுத் தண்ணீர்ச்சீலையிடவும். தாபிதம் தணிந்தவுடன் முழங்கையை மடக்கி 2 மரத்தப்பைகளைச் சரி கோணமாய் இசைத்து ஒன்றை புயத்தின் பின் பக்கமாகவும், மற்றதை முன்கைக்கு கீழாகவும் வைத்துவிட வேண்டும். 2-3கிழமை சென்றவுடன் முழங்கைப் பொருத்தை ஆட்ட அசைக்கத் துவக்கி விட வேண்டும்.

***முன்கைமுறிவு:-***

***கூபரகிக முறிவு:-*** முன் கையிலுள்ள அரந்தி என்பின் கூபரகவிகத்தில் அடிபடுவதனாலாவது அவயவத்தின் பின்பக்கமாய் உள்ள பெரும் பேசி வலப்பெற்று இறுகியிருப்பதனால் இவ்விதம் முறிந்து ரோகும்.

***குணம்:-*** முறிந்த உறுப்பு முழங்கையில் மடங்கும். நீட்டமுடியாதிருக்கும். மிகுந்த உபாதை கொள்ளும். முழங்கால் பொருத்தின் பின்பக்கம் குழிந்திருக்கும். முறிந்த பொல்லம் 5செமீ வரை மேலுக்கேறி நிற்கும். இது தாக்குதல் சம்பவங்களினால் ஏற்படும். முழங்கைப் பொருத்தில் உண்டாகும்.

***பிரயோகம்:-*** முறிந்த உறுப்பில் உண்டாகும் இவ்வீக்கமும், உபாதையும் தணியும் வரைக்கும் நீட்டி வைத்து அட்டைவிட்டுத் தண்ணீர்ச்சீலை விடவேண்டும். பின் முன்கைக்குச் சீலை சுற்றி முழங்கை மட்டில் வந்தவுடன் கூபரக விகத்தை அதன் நிலையத்தில் இழுத்து விட்டு அதன் மேல் விச் 8 சாங்கமாய் (Figure Eight) முழங்கைப் பொருத்தைச்சுற்றி பின்பு புயத்தின் பிற்பக்கமாய் இருக்கும் பேசி சுருங்காமல் பாதுகாக்க புயத்தைச்சுற்றி அதன் மேல் அவ்வுறுப்பு நீட்டியபடி

இருக்கத்தக்கதாய் அதன் முற்பக்கத்தில் ஒரு தப்பை வைத்துக் கட்ட வேண்டும். 3 கிழமை சென்ற பின் உறுப்பை பதமாய் ஆட்டி அசைத்து வர வேண்டும். இம்முறிவுக்கிடையில் விசிக்குச் சரியான சவ்வு வளர்ந்து முறிவு பொருந்துவதன்றி எலும்பூறி பொருந்துவது அரிது. முறிவோடு காயம் இருந்தால் ஊறடைந்த உறுப்பை வெந்நீரால் கழுவி சிராய் கழன்றிருக்கும் எலும்புத்துண்டுகளை எடுத்து காயத்தைச் சந்து செய்து தண்ணீர்ச்சீலை இட்டு முழங்கையை அசையாமல் நீட்டியபடி இருக்கத்தக்கதாக தப்பை வைத்துக் கட்டி தாபிதம் தணியும்படி அட்டைவிட்டுப் பத்தியமும் காத்து விரேச்சனம் பண்ணவும். காயம் மாறிய பின் முழங்கைப் பொருத்தில் வேறு கொள்ளாவிடில் அதை ஆட்டி அசைத்து சுய வழக்கத்திற்கு கொண்டு வர வேண்டும்.

***தசன விக முறிவு:-***

முன்கை பின்னுக்கு அசைக்கத்தக்கதாகவும் உள்ளங்கை அடிபட விழுவதனாலும் அரந்தி என்பு புய என்போடு பொருந்தும் பள்ளத்திற்கும் கீழ்ப்பட இருக்கும் விகத்திற் பற்றிப் பிடித்திருக்கும். பேசி பலாற்காரமாய் இருப்பதனாலும் முறியும். இம்முறிவு உண்டாகும் போது முன்னங்கை பொருத்தை விட்டுக் கழன்று பின்னுக்கு ஏறி நிற்கும். அதைப்பற்றி எடுத்துவிட குறித்த எலும்பு அராத்தும். முழங்கை வளைந்து அப்பொருத்து அசையாற்படிக்கு எத்தணத்தில் தூக்கி வைப்பது மேல். முறிவுக்கிடையில் விருச்சவ்வு வளர்ந்து பெருக்கும்.

***ஆரை. அரந்தி என்புகளுக்கிடையில் முறிவு:-***

முன்கையில் உள்ள இவ்விரு என்புகளும் ஒருமித்தாவது அல்லது தனித்தாவது நடுவில் தெறிக்கும். இரண்டு எலும்புகளும் ஒன்றாக முறிந்தால் முன்கை குறுத்து வளைந்திருக்கும். முறிந்த என்பின் மேல் தலையை பிடித்துக்கொண்டு கீழ் பகுதியைத் திரும்ப எலும்பு அரத்துப்படும். ஒன்று மாத்திரம் முறிந்தால் அதை சரியாக அறிந்து கொள்ளல் பிரதானம்.

*பிரயோகம்:-* முழங்கையிலும், கைக்குழைச்சிலும் பிடித்து எலும்பை சந்து செய்து ஊறு அடைந்த உறுப்பைப் பார்க்கச் சற்றளவான தப்பைகள் இரண்டு சீவி எலும்பிரண்டுக்கு முன்இடைவெளியிற் பொறுக்கத்தக்கதாய் மெத்தையிட்டு உறுப்புக்கு இரு புறதத்திலும் வைத்துக் கட்ட வேண்டும். கட்டும் போது முன்கையும், கையும் ஒரு நேராய் இருக்க வேண்டும். தப்பைகளிலொன்று முழங்கைமட்டுக்கும் தொடுத்து உள்ளங்கைவரைக்கும் பொறுக்கத்தக்கதாயும் கட்ட வேண்டும். கட்டி 1கிழமை சென்றபின் தப்பைகளை களைந்து கை தொடக்கம் முழங்கை வரைக்கும் சீலையால் சுற்றி அதற்கு மேல் தடித்த சீலையைத் தோய்த்து 4-5 சுற்று சுற்றி மரத்தப்பைகளை அதற்கு மேல் வைத்துக்கட்டி 4-5 கிழமை வரையில் எலும்பு பெலக்கும். ஊறி விடும். சீலை சுற்றும் போது சீலை சுற்றும் போது எலும்புகளிரண்டும் ஒன்றோடொன்று கூடத்தக்கதாய் நெருக்கித்து சுற்றப்படாது.

***ஆரை என்பின் கீழ்த்தலை முறிவு:-*** உள்ளங்கை அடியுண்ட விழுவதினால் முன்கையிலுள்ள கைக்குழைச்சுக்கு 2.5செமீ தெறிக்கும். இப்படி முறியும் போது முறிந்த தண்டும் கையும் முன்கையின் பிறபக்கத்தில் மேலுக்கே திட்டு நிற்குமாயில் இதையே குழைச்சு விட்டதென்று நினைக்கலாம். இதை வேறுபிரிக்க கையை ஆட்டிப்பார்க்க கையோடு கூட ஆரை என்பின் கூர் ஆடினால் முறிவென்றும் ஆடாதிருந்தால் குழைச்சு விட்டதென்றும் அறிந்து கொள்ளலாம். சிலருக்கு இம்முறிவோடு கைக்குழச்சும், பூட்டும் விட்டுப்போகும். முறிநத இடத்தில் வேதனை மிக அதிகமாகும். உள்ளங்கையை மேல்நோக்கி புரட்ட வேதனை அதிகமாகும்.

***பிரயோகம்:-*** முழங்கையை மடக்கி பெருவிரல் மேற்பக்கமாய் நிற்கத்தக்கதாய் முன்கையைப் புரட்டிப்பிடித்து அதனிருபுறத்திலும் இரண்டு தப்பைகள் வைத்து கட்ட வேண்டும். முறிநத எலும்பின் மேற் பொல்லத்தின் கீழ் அந்தலையில் பொறுக்கத்தக்கதாக உள்ளங்கை வழத்தில் ஒரு மெத்தையும் கீழ்ப் பொல்லத்தின் மேலந்தலையில் பொறுக்கத்தக்கதாய் புறங்கை வழத்தில் ஒரு

மெத்தையும் தப்பையினுள் வைக்க வேண்டும். 3-4 கிழமை செல்ல கையை ஆட்டி அசைத்து வரத் தொடங்க வேண்டும்.

***கைமுறிவு:-*** புறங்கையிலாவது கைவிரல்களிலாவது உள்ள எலும்புகள் முறிந்தால், எளிதில் விளங்கும். கடதாசிப் பலகையினாலாவது தோலிலாவது தப்பை செய்து அதை வைத்துக்கட்டி ஓய்வாக வைத்திருப்பதே அதற்கு செய்யும் பிரயோகம். இவ்வெலும்பு முறிவுடன் காயம் கூடியிருந்தால் மிகவும் பேணி பாதுகாக்க வேண்டும்.

***பழுவென்பு முறிவு:-*** பழுவென்பில் தாக்கம் ஏற்படல், நெஞ்சு சளித்தாக்கத்தால் அழுக்கப்படுவதனால் அது முறியும். எலும்பில் படும் தாக்கத்தினால் இவ்வூறுண்டாகில் மூச்சுப்பை, ஈரல் முதலான உள்உறுப்புக்கள் காயப்படவும் அதனால் இரத்தப்பெருக்கு ஏற்படவும் காரணமாகும். நெஞ்சின் உள்ளுறுப்புகள் நசிய வாய்ப்பு ஏற்படும்.

***குணம்:-*** ஊசியாற் குத்துவது போல் குத்தும். மூச்செடுக்கும் போதும், இருமும் போதும், அசையும் போதும் வேதனை கூடும். குறுமூச்செறியும், மூச்செடுக்கும் போதாவது, இருமும் போதாவது ஊறு கண்டவிடத்தில் எலும்பு அராத்தும் போது இது விளங்கும். உள் என்புக்கு கிட்ட இருந்தாலும், நோயாளி தடித்த ஆளாகவிருந்தாலும் இம்முறிவு விளங்குவதில்லை. பழு என்புகளில் பல முறிந்திருக்கமானால் முறிந்த பக்கத்து நெஞ்சு முழுவதும் சப்பளிந்து பதிந்து போகும்.

***பிரயோகம்:-*** நெஞ்சை சீலையாற் சுற்றி இறுக்கிக் கட்டி பழுக்கள் அசையாது பாதுகாத்துக் கொள்ள வேண்டும். சீலையால் இறுக்கிச் சுற்றுவதிலும் 2.5செமீ அகலமும், நெஞ்சைச்சுற்றி ஒன்றரைச்சுற்று சுற்றக்கூடிய நீளமுள்ள ஒட்டுப்பற்றுச்சீலையால் நெஞ்சை இறுக்கிச்சுற்றி வைப்பது சிறந்தது. பின்னர் வேண்டுமானால் இரத்தம் வாங்கி, ஆகாரத்தையும் குறைத்து, விரேசனம்

பண்ணுவித்து தாபிதம் கொள்ளாதபடி பாதுகாக்க வேண்டும். இருமலும், உபாதையும் நீங்கும்படி அபின் சேர்த்த மருந்துகள் கொடுக்கவும் வேண்டும். இரண்டு பக்கங்களிலுமுள்ள பழுவென்பு முறிந்திருந்தால் சீலையால் சுற்றிக்கட்ட முடியாமல் வரும். அதற்கு இரத்தம் வாங்கி, விரேசனம் பண்ணுவித்துப் போசனத்தையும் குறைப்பித்து ஒய்வாய் இருக்க வேண்டும்.

*துமாணம்:-* சிலருக்கு முறிந்த எலும்பு சுவாசப்பையை குற்றிவிடுவதால் மூச்செடுக்கும் போது உட்செல்லும் காற்று அக்காயத்தின் லழியாக தோலின் கீழ் புதைந்து மெது மெதுப்பான வீக்கமும், அவ்வீக்கத்தில ஊன்றும் போது கரகரப்பு உண்டுபண்ணும். சுவாசப்பையில் உள்ள காற்று வெளியில் அதிகமாகி தோல் பொருமும் இந்நிலையில் அதைக்குற்றி காற்றை வெளிஎடுக்க வேண்டும். மூச்சுப்பை பெருக்குமானால் மூச்சமுண்டாகும். இரத்தம் வாங்கி, முட்டுக்கறையாதிருந்தால் நெஞ்சறையில் துவாரம் செய்து காற்றை அப்புறப்படுத்த வேண்டும்.

***நெஞ்சென்பு முறிவு:-*** இவ்வென்பு முறிந்தால் மூச்சுவிடும்போதும், சரீரம் அசையும் போதும் எலும்பு அராத்துப்படும். பழு என்பு முறிந்ததற்கு செய்யும் பிரயோகம் இதற்குச் செய்யலாம்.

***கூபகஎன்பு முறிவு:-*** மிகப்பலாக்கார தாக்கதலினால் இவ்வென்பு முறியும். இவ்வூறில் அதிகவேதனை உண்டாகும். நிற்க முடியாமலிருக்கும். எழும்பும் போது சரீரம் கொட்டுண்டது போல் இருக்கும். இதில் சலப்பை, மலக்குடல், நாடி, நாளங்கள் கீழ் இழுத்திருக்கும்.

கூபக என்புகள் முறிந்திருக்கின்றதென ஆராயும் போது முறிந்த எலும்புகளின் கூர் மற்ற உறுப்புக்களை காயப்படுத்தாமல் ஆராய்வு பண்ண வேண்டும்.

*பிரயோகம்:-* நோயாளியை ஆறுதலாகப் படுக்க வைத்து சலப்பையில் வயர் வைத்து சலத்தை எடுத்து விடவும். சலப்பை

வெடித்து சலம் போகாமல் இருந்து வீக்கம் கண்டால் அவ்விடத்தில் கீறி சலத்தை வெளியேற்றவும். பின் முறிந்த எலும்பு ஊறத்தக்கதாய் அது அங்கிங்கசையாமல் இருக்கும்படி கூபகத்தை இறுக்கமாகச் சீலையால் சுற்றி முழந்தாட்வரை கூட்டிக்கட்டி ஊறடைந்த வழத்துடைச் சந்து அசையாமல் முறிந்த பொல்லங்களை நிலை பெயராமல் இருக்கத்தக்கதாய் தோலாலாவது கற்ற பேட்ச் எனும் பிசினாலாவது ஒரு தப்பையை அத்தொடைக்கும் சந்துப் பொருத்தில் வைத்துக் கட்டி விட வேண்டும்.

புச்ச என்பும், பீடிகை என்பின் நுனியும் பலாத்கர தாக்கதலினால் முறியும் பெண்களுக்கு புச்ச என்பும், பீடிகை என்பும் பொருந்தின பின் பிள்ளைகளுக்குண்டானால் பிரசவ காலத்தில் புச்சஎன்பு பெரும்பாலும் முறியும். கடைக்குடலில் விரலை விட்டு ஈடான எலும்பை நிலையத்தில் வைத்து விட்டுப் படுக்கப்பண்ணி மலமிறுகி எலும்பு நிலை பெயராமல் அது நுகைந்து போகும்படி பண்ணிக் கொள்ள வேண்டும்.

***தொடை என்பு முறிவு:-***

இவ்வெலும்பு மெற்தலைப்பின் கழத்திலாவது கணுக்களின் கீழாவது முறியும், நடுமையத்தில் முறியும், கீழ்த்தலைப்பிலுள்ள முனைகளிலும் முறியும்.

***தொடைஎலும்பு கழுத்து முறிவு:-***

இம்முறிவு எலும்பைத் தொடுக்கும் பைவிசிக்கள்ளாவது சம்பவிக்கும். விசிக்குட்படமுறிவதே பெருவழக்கம். கால் சறுக்குவதனாலும், தொடை சந்தடிபட விழவதனாலும் இந்த நிலையத்தில் முறியும். நாற்பது வயதிற்குட்பட்டவர்களுக்கு இந்நிலையத்தில் முறிவது அருமை. 50 வயதிற்கு மேற்பட்டவர்களுக்க விசேடமாகவும் அதிலும் பெண்களுக்கு கூடுதலாக எற்படும்.

***குணம்:-*** எழும்பி நிற்க முடியாது. தொடையின் மேற்பகுதியிலும், அவயப்பகுதியிலும் மிகுந்த வேதனையுண்டாகும். காலை ஆட்ட

அசையும். குறித்த உறுப்பு அதற்கிணையான உறுப்பிலும் குறுகிக்காணப்படும். காலை நீளத்திற்கு இழுத்து சற்று மேலாக கையைத் தொடையிற் கொடுத்துப் பார்க்க எலும்பு அராத்துவது விளங்கும். ஆட்டும் போது வேதனையுண்டாகும். பாதம் புறத்திற்கு பிரண்டிராமல் அகத்திற்கு பிரண்டிருக்கும். தொடைஎன்புக் கழுத்து முறிந்த பொல்லங்கள் இரண்டும். சரிவரச் சந்தியாமல் இருப்பதாலும் முறிந்த இடத்திற்குச் செல்லும் இசத்தம் எலும்புண்டாவதற்கு போதாமலிருப்பதனாலும் எலும்பு வளர்ந்து அம்முறிவு பொருந்தாமல் சிறுபாண்மையாக எலும்பு வளர்ந்து முறிவு பொருந்தும். சிலருக்கு முறிவு சற்றாவது பொருந்தாதபடிக்கு முறிந்திருக்கும். மேற் பொல்லத்தில் ஒரு பதிவும் கீழ்ப்பொல்லத்தில் ஓர் முறிவும் உண்டுபட்டு ஒன்றுக்கொன்று புகுந்து பொருத்தைப் போல் நாலுபக்கமும் சுழலக்கூடியதாகவிருக்கும்.

***பிரயோகம்:-*** இவ்விடத்தில் முறிந்த முறிவு என்பு வளர்ந்து பொருந்தும். ஆதலால் நோயாளியை நெடுநாளைக்கு படுக்க வைப்பது உபாதையும், நோவும் குறையும் வரைக்கும் கால் பொறுக்க ஒரு மெத்தையும் காலின் கீழ் ஒரு மெத்தையும் கொடுத்து 15 நாட்கள் வரைக்கும் படுக்கையில் விட்டுப் பின்பு பின் கலைத்தண்டமிருண்டும் பொருந்தும். படிப்படியாக நடக்கப் பண்ணவேண்டும்.

தொடை என்புக்கழுத்து முறிவு அதைக்காட்டும் விசிக்கு வெளியேயுண்டாகில் முறிந்த எலும்பு பெரும்பாலும் சின்னபின்னப்பட்டிருக்கும். விசிக்குட்பட்ட முறிவுக்கும் இம்முறிவுக்கும் உண்டாகும் குணங்கள் பொதுப்பட ஒரே தன்மை உடையயவாய் இருந்தாலும் கீழ் சொல்லப்படும் காரியங்களில் விசிக்கு வெளிப்புறத்திற் சம்பவிக்கும் முறிவினின்றும் வித்தியாசப்படும்.

1. அம்முறிவு சந்திறபடும் பலப்பான தாக்குகளினால் சம்பவிக்கும்.

2. எந்த வயதிலும் சம்பவிக்கும். 50 வயதிற்குட்பட்டவர்களுக்கு விசிக்குட்டையில் இவ்வெலும்பு முறிதலைக்காண்பரிது.
3. விசிக்குட்பட்ட முறிவிற்கும் கால் புரண்டு இருப்பது போல் அவ்விசிக்கு விளிப்பட முறியும்.
4. கால் குறுத்திருப்பதனால் விசிக்குட்பட்ட பதியும் போது எலும்பு அராத்துவதிலும் அதற்கு வெளிப்பட முறியும் போது அராத்துவது தெளிவாக விளங்கும்.

இம்முறிவு பலாற்காரத்தினால் உண்டானாலும், காய்ச்சலும், உபாதியும், இரத்தக்கன்றலும், வீக்கமும் மிகுதியாக உண்டாகும். விசிக்குட்பட்ட முறிவு கால் சறுக்கியதால் சம்பவித்து இப்பெயர்ப்பட்ட குணங்கள் உண்டுபட்டாலும் 1கிழமைக்கு மேற்பட இருக்காது.

***பிரயோகம்:-*** எலும்புமுறிவு இலகுவாகப் பொருந்தும் ஆகையால குறித்த எலும்பை சரியான நிலையில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இதற்கு முறிந்த உறுப்பை கட்டி வைப்பதே பொருத்தமானது. உள்ளங்கையளவு அகலமும் முலைமார்பு தொடுத்து பாதத்துக்கு கிடப்பட்ட 10செமீ நிற்கத்தக்கதாக நீளமும் உள்ள ஓர் பலகை எடுத்து அதன் மேல் தளத்தில் 2துவாரமும் கீழ் அந்தத்தில் 2அலகும் அறுத்து அப்பலகையின் நீளஅகலத்திற்கு தக்கதாய் மெத்தையிட்டு வைத்துக் கொண்டு முறிந்த உறுப்பைச் காலிலும் சந்திலும் பிடித்து சரியீனமாய் இழுத்துச் சந்து வரைக்கும் சீலை சுற்றியபின் முன் சொன்ன தப்பையை அவ்வுறுப்பின் பின்புறப் பக்கத்துக்கு வைத்து வேறொரு சீலையினால் காற்குழைச்சையும் தப்பையிலுள்ள காலோடு சேர்த்துச் சுற்றி விட வேண்டும். இன்னுமோர் துண்டெடுத்து சதுக்கம் போல மடித்துச் பஞ்சு வைத்துச் சுற்றிக் கட்டுக்குட் கொடுத்துத் தப்பையின் மேலந்தத்திலுள்ள துவாரத்தின் வழியாக சீலையின் தலையைக் கோத்தெடுத்துக் கொண்ட பலகையிற் பிடித்துத் தள்ளி உறுப்பைச் சரி நீளமாக்கிப் பின்பு சீலையை இறுக்கி முடிந்துவிட வேண்டும். கடைசியாய்

அகலாமான ஒரு சீலைச் சுருளாற் தப்பையைச் சள்ளையோடணைத்து சுற்றி விட வேண்டும். இழுக்கும் போது அதிகம் உபாதையாகி ஒரே முறையாய் காரியத்தை முடிக்காமல் இரண்டொரு நாளுக்குள் இழுக்க வேண்டிய நீளத்திற்குக் கொண்டு வரவும்.

***பிரயோகம்:***

மேற்கூறப்பட்ட வகையாக உறுப்பைக் கட்டி வைப்பது போல் இதற்கும் கட்டி வைக்க வேண்டும். அக்கட்டில் எலும்பு நிலையத்தில் நில்லாதிருந்தால் அதற்கிடராய் இருக்கும் பேசிகள் நுகைந்திருக்கும்படி நோயாளியைச் சாய்த்திருத்தி விடவேண்டும். தொடைஎன்பு நடுவில் முறியும் போது வளர்ந்தவர்களுக்கு ஒரு பக்கத்துக்கும் சரிவாயும், வாலிபருக்கு குறுக்காயும் முறியும். குணம்:- முறிந்த உறுப்பு குறுத்திருக்கும். கால் வெளிப்புறமாய் புரண்டு நிற்கும். எலும்பு அரா்த்துவது இலகுவாக தெரியும். வீக்கம் மிகுதியாக உண்டாகும். முறிந்த எலும்பின் கீட்பொல்லம் மேற் பொல்லத்தின் அகப்பக்கமாய் ஏறிட்டு புறம் பக்கமாய் புரண்டு நிற்கும்.

***பிரயோகம்:-*** எலும்பு முறிந்திருக்கும் மாதிரிக்குத் தக்கதாக பிரயோகம் பலவகைப்படும். அவற்றுள்

1. இவ்வெலும்பு அதன் கணுக்களுக்கு 5செமீ நீட்ட முறிந்தால் முறிந்த உறுப்பின் தசைகள் நுகைந்திருக்கத்தக்கதாக நோயாளியை முறிந்த பக்கம் கீழாய்ப் படுக்கப்பண்ணி தொடை, வயிறோடண்டத்தக்கதாய் முழந்தாளை மடக்கி கோணமாய் வளைவு கொண்ட ஒரு மரத்தப்பையை அல்லது தோற்தப்பையாவது வைத்துக் கட்டிவிட வேண்டும்.

2. இவ்வெலும்பு நடுவிலாவது அதற்கு கீழ்ப்படவாவது முறிந்தால் முன் சொன்ன பிரகாரம் நேர்மையானதுமான 'விஸ்தன்' தப்பை கட்டவும். இத்தப்பையின் நீளம் கமக்கட்டு - தொடுத்து அப்பால் 15செமீ வரைக்கும் நீண்டிருக்க வேண்டும்.

3. முறிவுடன் காயம் கூடி இருந்தால் இது A சாங்கமாய் சரிப்படுத்தக்கதாக 2 பலகை பிணைத்து ஒரு சரிவற்

தொடையும் சரிவில் தொடைக்காலும் பொறுக்கத்தக்கதாய் வைக்க வேண்டும்.

4. இம்முறிவூறுவதற்கு சீலையிற் பசையிட்டு உறுப்பைச்சுற்றி வைப்பது சிறந்தது. இதைச்சுற்றும் போது உறுப்பு முழுவதையும் அழுத்தமாக வெள்ளைச்சீலையால் முதற்சுற்றி அதை மஞ்சல் மூடி அதன் மேற் குண்டி முதல் குதிக்கால் வரைக்கும் 12செமீ ஒரு கடதாசிப்பலகையும் இதிலும் ஒடுக்கமான இரண்டு பலகைகளைத் தொடைச்சந்து முதல் காற்குழச்சு பொறுக்க அவ்வுறுப்பின் இருபுறத்துக்கும் என்றுமோர் குறுகின பலகையைத் தொடையின் மேல் பக்கத்திற்கும் கஞ்சிப்பசையில் தோய்த்து வைத்து பின் கஞ்சிப் பசையிற் சீலையை நனைத்து இரண்டு பக்கமும் சுற்றிவிட வேண்டும்.

இரண்டு தொடையும் முறிந்தால் நோயானியை மல்லாக்கப் படுக்கப்பண்ணித் தொடை இரண்டுக்கும் கன்னாலு தப்பை வைத்துக் கட்டி முழந்தாட்களைத் தூக்கி மெத்தை கொடுத்து உயர்த்தி இருக்க வேண்டும். அல்லது முன் சொன்ன A இன் சாங்கமம் அகலமான பலகை பிணைத்து அவயமிரண்டையும் அதியேற்றவாம். தொடை என்பின் கீழ்த்தலை முறிந்தால் மேற் பொல்லம் முன்னுக்கும் கீட் பொல்லம் பின்பக்கமாய் கீழுக்கும் அவைகளிற் தொடுத்திருக்கும் பேசிகளால் தொகுக்கப்பட்டிருக்கும்.

***பிரகோபம்:-*** முறிவன் 4 பக்கத்திற்கும் 4 தப்பை வைத்துக் கட்டி இது A சாங்கமாய்ப் பிணைத்த பலகையின் மேல் அவ்வுறுப்பை வைக்க வேண்டும். தொடை எண்பின் முரி முழந்தாட் பொருத்துக்குள் முறிநதால் பெரும்பாலும் சீவ மோசத்திற்கு ஏதுவாகும். எலும்பு சின்னபின்னப் பட்டிருந்தாலும் காயம்கூடி இருந்தாலும் சில வேளை உறுப்பைச் சோதிக்க வேண்டிய அவசரமிருந்தால் அவ்வுறுப்பை நீட்டி வைத்து எலும்பைச்சந்து செய்து அட்டைவிட்டுத் தண்ணீர்ச்சீலை செய்து தாபிதம்

கொள்ளாதபடி பாதுகாத்துக் கொள்ள வேண்டும். பின் கடதாசிப்பலகை தப்பை வைத்து கட்டி 5 கிழமை சென்றபின் காலை மெதுவாக ஆட்டி அசைத்து வர வேண்டும்.

தொடை என்பு முறிந்ததற்கு இவ்விதமான பிரயோகங்கள் அல்லாமல் கமக்கட்டுக்கு வாங்கி உள்ளங்காலுக்கு 4 இஞ்சி வெல்ல நிக்கத்தக்கதாக நீளமான ஓர் தப்பை எடுத்து அதன் கீழ்த்தலைக்கு 2இஞ்சு மேற்பட்ட உள்ளங்காலிற் பாதி அகலமான ஓர் கட்டை தைத்து காலுக்கு வைத்து முக்கால் யார் நீளமான ஓர் ஒடுங்கிய உறையில் பஞ்சடைத்து திரணையாக்கி அதனிரு தலைக்கும் காடாக்கண் தைத்துக் கவட்டுக்குட்கொடுத்து மேலுக்கிழுத்து தப்பையிலுள்ள துவாரத்திற் கோத்துக்கட்டிப் பின்பு 1இஞ்சி முழந்தாட்குக் சற்றுக் கீழே தொடங்கி பாதத்துக்கு கீட்பட்ட 12இஞ்சு மெல்ல நிற்கத்தாய் நீளமுள்ள ஒட்டுப்பற்றுச்சீலை துண்டொன்று எடுத்துக் கணைக்காலுக்கு பக்கத்திலும் ஒட்டிக் கால்விரல் முதல் முழந்தாழ் வரை வேலிதத்தால் சுற்றி பின்பு பற்றுச்சீலையை தப்பையின் கீழ்தலையிற் கட்டி முறிந்த என்பை சந்து செய்யவும்.

***முழந்தாட்சில் முறிவு:-***

இச்சில்லில் படும் தாக்கத்தினால் அதிற் பற்றியிருக்கும் பேசிகள் சடுதியாகப் பாதிக்கப்படுவதனால் இவ்வூறு ஏற்படுகிறது. இம்முறிவினால் தசைசுருங்குவதனால் குறுக்குப்படாய் முறியும்.



***குணம்:-*** குறுக்குப்பாடாக முறிவதால் முறிந்த துண்டுகள் பிரிந்து நிற்கும். முழந்தாளை மடக்க இப்பிரிவு அதிகமாகும். எழுந்து நிற்கவோ அல்லது உறுப்பை உயர்த்தவோ கூடாது. பெரும்பாடாவது , சின்னபின்னப்பட்டாவது முறிந்தால் எலும்பு அராத்தப்படுவது தெரியும். பெரும்பாலும் முழந்தாட் பொருத்து மிகுதியாக வீங்கும். இவ்வெலும்பு குறுக்குப்பாடாய் முறிந்தால் அதற்கிடையில் எலும்பு வளர்ந்து அம்முறிவு பொருந்துவது அரிது. முறிந்த எலும்புகள் கால் இஞ்சி முதல் ஒரு இஞ்சி

வரை ஒன்றையொன்று விலகி நிற்கும். சிலருக்கு 4-5 இஞ்சி விலகி நிற்கும். இவ்வாறு விலகி நிற்கும் துண்டுகள் ஒன்றரை இஞ்சிக்கு மேற்படாதிருந்தால் அதில் சவ்வு வளர்ந்து முறிவு பொருந்தும். நெடும்பாடாய் முறியும் போது முறிந்த பொல்லங்கள் விலகாதிருந்திருக்கும் முறிவுக்கிடையில் எலும்பு வளர்ந்து பொருந்தும்.

***பிரயோகம்:-***

நோயாளியை சரித்திருத்தி ஊறடைந்த உறுப்பை நீட்டி வைத்து காலுக்கும் பின்வளத்தில் நேர்த்தியாய் மெத்தையிட்டு தப்பைவைத்துக்கட்டி உபாதியும், வீக்கமும் தணியும்படி அட்டைவிட்டு தண்ணீர்ச்சீலை கட்ட வேண்டும். உபாதி, வீக்கம் தணிந்த பின் முறிந்த என்புக்கு மேலும். கீழும் சீலை சுற்றி முறிந்த பொல்லங்கள் சந்திக்கத்தக்கதாய் முன்புற்றினை சீலைகளில் வேறு சீலையால் நெடுப்பாட்டுக்கு பூட்டாயிறுக்கக்கட்டி விடவேண்டும். இவ்விதமாக கட்டி வைத்து 6 கிழமை சென்றபின் நோயாளியை உலாவும்படி பண்ணலாம். முழந்தால் மடக்கில் பின் வழத்தில் ஒரு தோற் தப்பை வைத்து கட்டிக் கொள்ள வேண்டும்.. 3 மாதம் வரைக்கும் முழந்தாலை சற்றாகிலும் மடக்கக்கூடாது.

***கால் முறிவு:-***

காலில் உள்ள இரண்டு எலும்புகளில் பெரிய எலும்பே பெரும்பாலும் முறியும். எலும்புகள் இரண்டும் முறிந்தால் முறிந்த இடத்தில் கால் ஆடுவதனாலும், முறிந்த எலும்பு அராத்துவதனாலும் முறிந்த தன்மையை இலகுவாக அறிந்து கொள்ளலாம்.

***பிரயோகம்:-*** முறிந்த எலும்பை முதல் வெறும் சீலையால் சுற்றிப் பஞ்சால் மூடி 10செமீ அகலமுள்ள கடதாசிப்பலகை ஒன்று முழங்காலின் பின் பக்கம் தொடங்கி குதிக்காலுக்கப்பால் 6 இஞ்சு வரைக்கும் புறப்பட வைத்து உள்ளங்காலுக்கு அப்பலகை மடக்கி விட்டுப் பின்பு காலுக்கு அகவளத்திற்கும்,

புறவளத்திற்கும் ஒவ்வொரு கடதாசிப்பலகை வைத்துச் சீலையில் கஞ்சிப்பசை இட்டு இரண்டு இடுக்குச் சுற்றி விடவும். இது காய்ந்தவுடன் கால் மிதியாமல் பொல் ஊன்றி உலாவவும்.

கால் என்புகளில் நள என்பு எனும் பெரிய என்பின் மேற்தலை முறிந்தால் அவ்வுறுப்பை நீட்டி உயர்த்தி வைத்து முழந்தாட் பொருத்து அசையாதிருக்கும்படி கடதாசிப்பலகையில் தப்பை செய்து கட்டவேண்டும். இதிலெழும்பும் தாபிதம் தணியும்படி அட்டைவிடவும். வெந்நீர்ச்சீலையிடவும் வேண்டிவருமாதலால் சீலை சுற்றும் போது முழந்தாளின் முற்பக்கத்தை விலக்கிச் சுற்றவேண்டும். 5 கிழமை சென்றவுடன் பொருத்தை கழட்டி அசைத்து கொள்ள வேண்டும்.

காலெண்புகளில் சரகவென்னும் சின்ன என்பின் கீழந்தம் ஒப்பரவற்ற நிலங்களில் குதிப்பதனாலும், பாதம் திருகுப்படுவதனாலும் காற்குழைச்சுக்கு ஒரு இஞ்சு அளவிற்கு மேற்பட முறிந்து போகும். காற்குழைச்சுக்கு அகப்பக்கமாக இருக்கும் கணுவும் இவ்வித ஏதுக்களால் முறிந்து போகும். இவ்விடையூறுடன் கூடப் பெரும்பாலும் காற்குழச்சு விலகி இருப்பது மட்டுமன்றி மிகுந்த உபாதியும் வீக்கமும் உண்டாகும். முறிந்த இடத்திலெம்பு அராத்துவதும் தெரியக்கூடியதாகவிருக்கும்.

***பிரயோகம்:-***

இரத்தக்கன்றலும், தாபிதம் உண்டாகி வீக்கம் எழும்பினால் அது தணியும் வரைக்கும் ஓயாதபடி தண்ணீர்ச்சீலை இடவெண்டும். பாதம் அதிகமாக திருகுப்படாமல் இருந்தால் வீக்கம் தணிந்தவுடன் ஏற்ற தப்பை வைத்துக்கட்ட வேண்டும்.

காலில் உண்டாகும் எவ்வகை முறிவுக்கும் கட்ட முறிவுப்பெட்டி பிரயோசனமானது. அவ்வச்சு செய்யவும் பிரயோகிக்கவும் வகை

முழங்காலுக்கு சற்று மேலே தொடங்கி உள்ளங்கால் வரைக்கும் பொறுக்கத்தக்க நீளமுள்ள ஒரு பலகை எடுத்து

அதன் ஒரு தலையில் பாதத்தை பாறாகச் சற்றே நீளமான ஓர் பலகை நிறுத்திடமாய் நிற்க வைத்துப் பின்பு அதன் கன்னங்களிரண்டுக்கும் 6 இஞ்சு அகலமும் தளப்பலகையின் கீழுள்ள இரண்டு பலகைகளை ஆடத்தக்கதாய் இறக்கினால் பிணைத்து ஒரு பெட்டியாக்கி அதில் ஒரு பஞ்சு மெத்தை வைத்து அதன் மேற் தலையை வைத்து முறிந்த எலும்பைச் சந்து செய்து பாத்ததை நிறுதிடமாக இருக்கும் பலகையோடு சேர்த்துக்கட்டி பின்பு கன்னப் பலகைகளைக் கூட்டி சீலைத்துண்டுகளால் கட்டிவிட வேண்டும். உறுப்பைச் சரிசாங்கமாய் பெட்டியில் வைப்பதற்கு மெத்தைப்பாத்திரம் போதாதிருக்குமானால் வேண்டிய இடங்களுக்கு சீலை அடைத்து விட வேண்டும். உறுப்பு எந்தவிதமாக மாறியிருந்தாலும் அதை சரிசாங்கமாக்கலாம்.

முறிந்த காலை நளஎன்புப்பக்கத்தில் எலும்பின் புடைக்கு மேற்பட்ட ஒரு மெத்தையும் , சரஎன்புப்பக்கத்தில் முறிவுக்குச் சற்றே கீழே ஓர் மெத்தையும் வைத்துப் பெட்டியைக் கூட்டிக் கட்டவும். மெத்தைகளின் நெருக்கத்தினால் எலும்பு சரிசாங்கமாய் சந்தித்து வரும். முறிவோடு காயம் கூடினால் மெத்தைக்கும் பதிவாய்த் தவிடு பரவி அதன் மேல் ஊறடைந்த உறுப்பை வைத்துப் பாதத்தை நிறுதிடமாய் இருக்கும் பலகையோடு சேர்த்துக்கட்டி பின்பு கன்னப்பலகைகளைக் கட்டி சீலையால் முடிந்து கால் சரிசாங்கமாய் இருக்கத்தக்கதாக தவிட்டில் வேண்டிய இடங்களில் அடைத்து விட வேண்டும். கால் எவ்விடத்தில் முறிந்தாலும் கட்டும் போது பெருவிரல் முழந்தாட்சில்லின் அகவோரத்திற்கு நேராய் நிற்கத்தக்கதாய் கட்ட வேண்டும்.

***பாதமுறிவு:-***

பாதத்தில் படும் தாக்குதலினால் அதிலுள்ள எலும்புகள் முறிந்து போவது மட்டுமன்றி இரணம் முதலான வேறு ஊறுகளும் உண்டாவதால் காலை நன்கு சோதனை செய்ய வேண்டும். முறிவு மாத்திரம் இருந்தால் பாதம் சுயநிலையில் நிற்கத்தக்கதாய்

கடுதாசிப்பலகையில் செய்த தப்பையாவது வேறு யாதொன்றாவது வைத்துக்கட்டி ஓய்வாய் இருக்கப்பண்ண வேண்டும். குதிஎன்புகளில் படும் தாக்குதல்களினால் அதில் பிடித்திருக்கும் பேசி வலுவானதாய் இருப்பதினாலும் அவ்வெலும்பு முறிந்து போகும். குதிநாா் அறுந்தால் செய்யும் பிரயோகத்தை குதிஎன்பின் முறிவிற்கும் செய்ய வேண்டும்.

## பொருத்தில் உண்டாகும் ரோகங்கள்

***நிந்தா சில்லியின் தீவிர தாபிதம்:-***

பொருத்துக்களில் ஏற்படும் தாக்குதல்களினால், அமுக்கத்தினால், குளிரினால், வாதரோகம், மேகரோகம் முதலியவைகளாலும், இரசம் அதிகமாக உண்பதாலும், நிந்தாசில்லில் தீவிர தாபிதம் உண்டாகும். முழந்தாட் பொருத்திலே இந்நோய் உண்டாகும்.

***குணம்:-***

பொருத்துழையும், அசைக்க நோவும், வீங்கும்,சூடு கொள்ளும், தோல் சிவக்கும், கடினமான காய்ச்சல் காணும், உறைக்குள் நீா் கொள்வதனால் வீங்கும், வெளிப்பொருத்தில் வீக்கங்கண்டால் நீா் தளம்ப நேரிடும். பொருத்தைக் கட்டும் விசி குறைவாய் இருக்குமிடத்தில் இவ்வீக்கம் அதிகமாகப் புடைத்துப் பொருத்தின் சாங்கம் மாறுதல் கொள்ளும். இந்நோய் முழந்தாளில் உண்டுபட்டால் கூபா முனைக்கு மேல் வீக்கம் வெளிப்படையாக இருக்கும். தொடைச்சந்து, தோள்மூட்டுக்களில் உண்டுபட்டால் அப்பொருத்துக்களை சூழ்ந்திருக்கும் தசை புடைத்திருக்கும்.

இந்நோய் அற்பமாகில் சவ்வு சிவந்திருக்கும். பொருத்துக்களில் ஊனம் நிறைந்திருக்கும். நோய் கடினமாகில் அச்சவ்வில் சீழ் உறைந்திருக்கும்.

***பிரயோகம்:-***

ஊறுபாட்டினால் இந்நோய் உண்டாகில் பொருத்து சற்றேனும்

அசையாதபடி தப்பை வைத்துக்கட்டி அட்டைவிட்டாவது, கொம்பு வைத்தாவது, இரத்தமெடுத்து, நோயாளியின் ஆரோக்கியத்திற்கு தக்கவாறு தண்ணீர்ச்சீலையாவது, வென்னீர்ச்சீலையாவது இட்டு மட்டாய் விரேச்சனம் பண்ணுவித்து சற்றே வாயவியத் தக்கதாய் கலமலும் அபினும், அந்திமணியும் சேர்த்து 4 மணிக்கு ஒரு தடவை கொடுத்து வரலாம். உபாதை தவிர்ப்பதற்கு இராக்காலங்களில் அபின் கலந்த மருந்துகள் கொடுக்கலாம். இந்நோய் வாதரோகத்தை அடுத்துப் பல பொருத்துகளிலுண்டாகும் தசைநார்களுக் குறைவாய் இருக்கும் சவ்வுக்கும் பரந்திருந்தால் மேற்கூறிவாறு மருந்து செய்விக்கவும் இரசம் கொடுத்து வியாதி வந்திருந்தால் அம்மருந்தை நிற்பாட்ட வேண்டும்.

***நிந்தாசில்லியின் காலிக தாபிதம்:-***

இது உண்டாகும் போது பொருத்துழையும். இவ்வழைவு நாட் சென்ற பின் கூடும். தாபிதம் குறைவு. வீக்கம் உண்டாகும். இந்நோயினால் இதைச்சூழவிருக்கும் வைப்புகளும் தடித்து வைரம் கொள்ளும். வீக்கத்தில் உண்டான நொய்மையும் தளதளப்பும் குறைந்து போகும். இதை கவனிக்காது விட்டால் பொருத்தினுள் முறாந்து புண்பட்டு பொருத்து சீர் குலைந்து விடும்.

***பிரயோகம்:-***

இந்நோய் வாதரோகத்தால் உண்டாகில் வாதரோக சிகிச்சை செய்யவேண்டும். யாதொரு ஊறுபாட்டால் உண்டானால் இராத்திரிக்காலங்களில் உழைவு அதிகப்பட்டு தாபிதம் சற்றே உறைப்பாகவும் இருக்கில் அவ்வுறுப்புகளுக்கு தப்பை வைத்து கட்டி தண்ணீர்ச்சீலையிட்டு அட்டைவிட்டு மருந்துகளும் கொடுக்க வேண்டும். பொருத்தில் பிடித்திருக்கும் நீரும், வீக்கமும் காணில் அவை சுயநிலைக்கு வர கொப்புளப்பற்றிட்டு புண்ணை விரைவாய் மாற்றி மறுபடியும் கொப்புளப்பற்று இடவும். பொருத்து முழந்தாள்ப் பொருத்துப்போல வெளிநாடிய பொருத்தாகில் இப்பற்றை பொருத்துக்கு கிட்ட போடலாகாது. கொப்புளப்பற்றிட்டு நோயை சற்றே தணித்துவிட்டு தைலம் இட்டு நோய் ஆரோக்கியமாகவரும் தறுவாயில் கற்பூரநீரால் கழுவி தைலத்தை விந்துச்சீலையில் தடவி அப்பொருத்தை ஒட்டுப்பற்றால் மூடி

ஒட்டி அதன் மேல் சுற்றிவிட வேண்டும். தாபிதம் தணிந்து பின் அப்பொருத்து விறைத்து மடங்கிப் போனால் அதை சற்று சற்றாய் நீட்ட வேண்டும்.

***பொருத்து விப்புருதி:-***

யாதொரு பொருத்தில் தீவிர தாபிதமாவது உண்டான பின் அப் பொருத்து மிகுதியாய் வீங்கி யாதொரு மருந்திலும் தணியாதிருக்க உபாதை கொண்டு கர்மேந்திரியங்கள் சர்வம் கெட்டு சவ்வில் சீழ் பற்றி தொற்றறியலாம்.. இதை சத்திரமிட்டு வெளியகற்றலாம்.

***காலிகஅருஸ்வாதம்:-*** பொருத்துக்களில் உள்ள வைப்புக்கள் யாவும் பேதப்பட்டு பொருத்தின் உட்குழாய் விசாலங்கொள்ளும எலும்பின் அந்தலைகள் பருத்துச் சப்பட்டையாகும். அவ்வந்தலைகள் சூழவர எலும்பு பொருக்குபற்றியிருக்கும். முருந்தளவுக்கு மேற்படவளர்ந்து பின்பு எலும்பாகும். அது உரோஞ்சப்படும் இடங்களிற் தேய்ந்து அற்று எலும்பு யானைக்கொம்பு போல் வளைந்து அழுத்தமாகும். இவ்விதமான எலும்பு புண்பட்டு கறையான் அரித்தது போலிருக்கும். விசிகள் பெரும்பாலும் தேய்ந்து எலும்பை விட்டு வளைந்து போகும். குணம்:- வேதனையிருக்கும், பொருத்திலுள்ள எலும்புகளின் முகப்புக்கள் ஒன்றோடொன்று அமத்தும் போது நோகொள்ளாது பொருத்து விறைக்கும்.

***காரணம்:-*** வாதநீரே இந்நோய்க்கு காரணம். இளம் பெண்கள் ருதுவாகிற காலத்திலும், நடுவயதானவர்கள் பூப்பம் மாறுகின்ற காலத்திலும் இந்நோய் அவர்களுக்குண்டாகும்.

***பிரயோகம்:-*** விரேச்சனம் பண்ணல். வயிற்றில் புளிப்பை மாற்றுதல்.

***பொருத்தைச் சேரும் அறை வைப்பில் தாபிதம்:-***

இந்நோய் தொடங்கும் போது தடித்து வீங்கும். உபாரத கொள்ளும். நோய் அதிகரிக்க தோல் பெருமி மினுமினுப்ப கொள்ளும். உபாதை கூடும் சில காலம் செல்ல சீழ் கூட்டி

பல விற்புருதிகளை பொருத்துக்குள் குடைந்து அப்பொருத்தில் தீரா நோயுண்டாகும்.

***பிரயோகம்:-*** அட்டைவிட்டு, கொம்பு வைத்து, இரத்தம் எடுத்துப் பின்பு தண்ணீர்ச்சீலை இட்டு வரவேண்டும். தாபிதம் குறைந்த பின் ஔடதம் இட வேண்டும்.

## *விசிகளில் உண்டாகும் ரோகங்கள்*

**விசித்ததாபிதம்:-** பொருத்துக்களைக் கட்டும் விசியில் ஒரு வகையான தாபிதம் உண்டாகும். அப்பொருத்தை ஆட்டும் போதாவது, திருப்பும் போதாவது மிகுந்த வேதனையுண்டாகும்.

***விசி இளகுதல்:-*** யாததொரு பொருத்து வெகுநாளாய் பாவிக்கப்படாத படிக்காவது அப்பொருத்துக்குள் நரம்பியக்கம் பழுதுபட்டாவது இருந்தால் அப்பொருத்துக் கழன்று போகத்தக்கதாய் அதைக் கட்டும் விசிகள் நுகையாகவும், நெடுகவும் ஏதுவாகும். இதற்கு கொப்புளப்பற்று இடுவதாலும் பொருத்தை தேய்த்து வருவதாலும், தண்ணீரில் குளித்து வருவது பிரயோசனமாகும்.

## *பொருத்தல் முருந்தில் உண்டாகும் ரோகங்கள்*

***சதுர்வ போஷம்:-***

இது வயோதிபத்தில் உண்டாகும். சிலருக்கு பொருத்தில் உள்ள எலும்பை மூடும் முருந்து தேய்ந்து கொஞ்ச இடம் அற்றுப்போகும். ஆயினும் இம்முருந்தும் இயல்பாய் மூடப்பட்டிருக்கும். எலும்பு அராத்தும் சத்தம் காட்டுவதல்லாமல் வியாதிக்கடுத்த வேறொரு குணம் கொள்ளாது.

***முருந்து புண்படல்:-*** இந்நோய் சயநோய் கொண்டவர்களுக்கும் 14- 30 வயதுக்குட்டவர்களுக்கு உண்டாகும். குளிர் பிடிப்பதும், முருத்தில் உண்டாகும் ஊறுபாடுகளை கவனியாது விடுவதாலும் அது புண்பட ஏதுவாகிறது.

***குணம்:-*** முதல் பல பொருத்துக்களில் நோவு காணும். கடைசியாக ஒன்றில் பொறுப்பாய் நிற்கும். சில காலம் செல்ல

இவ்வுபாதை அதிகமாகும். இரவிலே கூடுதலாகக் காணப்படும். தொடைச்சந்தினூடாக கைக்குழைச்சில்லாவது இந்நோய் உண்டாகி உளைவு தென்படும். நோய் கூட உபாதை கூடி வலிப்பண்டாகும். நித்திரை வராது. இதில் 4-5 மாதத்திதின் பின்னாவது வீக்கம் உண்டாகும். தொடக்கத்தில் வைத்தியம் செய்தால் புண்படல் நின்றுவிடும்.

***பிரயோகம்:-*** பொருத்து அசையாதபடி நோயாளிக்கு தப்பை வைத்து கட்டிவிடவேண்டும். உபாதை கூடவுள்ள காலங்களில் அட்டைவிட்டாவது, இரத்தம் எடுத்து அல்லது கொப்புளப்பற்றிட்டு வாய் சற்று அசைக்கத்தக்கதாய் இரசம் கொடுத்து பின் ஔடதப்பிரயோகம் செய்ய குணமாகும். நோயாளி பலவீனப்படாமல் புஷ்டியிணை கொடுக்கக்கூடிய உணவுகள் கொடுக்க வேண்டும். உபாதையைத் தணிக்க அபின் சேர்ந்த மருந்துகள் கொடுக்க வேண்டும். விப்புருதி உண்டாகில் அதற்கு சத்திரமிடவேண்டும். பிரயாசைப்பட்டு சீழை வெளியேற்றக்கூடாது.

என்பின் தலை பழுதடைவதால் அதை அடுத்திருக்கும் முருத்து புண்பட்டு என்புப்பொருத்துச் சீரழிந்து போகும். மக்கெலும்பு நெய்மையும் சிவந்ததாயுமிருக்கும். இதிலுள்ள கல்சியம் குறைந்திருப்பதால் இலகுவில் வெட்டுப்படக்கூடும். இதன் சிற்றறைகளில் ஒர் வகையான செந்நீர் மொய்த்திருக்கும். இவ்வகையாக மென்மை படுவதனால் அதிலுள்ள பொருத்து அதைவிட்டு இலகுவாகக் கழலும். கழட்டிப்பார்த்தால் எலும்புடன் இணைந்த பாகம் புண்பட்டிருக்கும். இப்புண்முருக்கத்தைப் பீறினால் பொருத்தில் தாபிதமும், சீழும் உருவாகும். இந்நோய் முழங்கால், முழங்கை, கைக்குழற்சி ஆகியவற்றில் பெரும்பாலும் உண்டாகும். 30 வயதின் பின் இந்நோய் உண்டாவதரிது. நோய் கூடும் போது எலும்பின் உட்பக்கம் கோதாகவும், வெளிப்பக்கம் படைபடையாகக் காணப்படும். இதன் பொருத்துக்குள் ஆழமாக ஒரு சிறு இடத்தில் அரிக்குமாப்போல் உபாதை தொடங்கும். இவ்வுபாதை பொருத்து ஆடும்போது அதிகப்படும்.

***பிரயோகம்:-*** பொருத்துக்கணையாய் இருக்கும் முருத்தின் புண்பாட்டுக்குச் செய்யும் பிரயோகத்தை இதற்கும் செய்ய

வேண்டும். தோல் தப்பை வைத்துக்கட்டி புஷ்டி கொடுக்கும் ஆகாரத்தை கொடுக்க வேண்டும். அட்டைவிட்டு தாபிதத்தை தணிக்க வேண்டும். விப்புருதி உண்டாகில் அதை தன்னிலையிலே உடைக்க விட வேண்டும்.

***கனதை:-***

பொருத்து அதிலுண்டாகும் உரோகங்களினாலும், ஊறுகளினாலும் பெரும்பாலும் விறைத்து அசையாமலிருக்கும் இந்நோய் 3 வகைப்படும்.

***1. போலிக்கனதை:-*** பொருத்தினுள்ள கித்தாசில்லியும், விசிகளும் தடித்துப் போவதனால் அதனைச்சூழவுள்ள தசைகள் முரண்படுவதனாலும் பொருத்து விறைக்கும். பொருத்து வியாதிப்படும் போது அதை நீட்டும் பேசிகள் சூம்பிப்போவதால் மடக்கும் பேசிகள் குறுத்து நீளம் கூடாமல் வருகிறதாலும் சிலருக்கு பொருத்து விலகிப் போகும். பொருத்திலுள்ள கித்தாசில்லியில் தாபிதம் கொள்வதனால் இவ்வகையான விறைப்பு பெரும்பாலும் உண்டாகிறது.

பிரயோகம்:- பொருத்தை நீட்டும் பேசிகளுக்கு காற்பான தைலங்கள் பூசி தேய்த்துப் பொருத்தில் நோக் கொள்ளாமல் அதை நாளுக்குநாள் நீட்டி மடக்கி வருவதே பிரயோகம்.

***2. விசிக்கனதை:-*** பொருத்தல் இருக்கும் முருந்து புண்படுவதினாலும், எலும்பு பொருந்துமிடத்தில் முறிந்து பூட்டு விலகுவதனாலும் எலும்பு சந்திக்கும் இரு தலைகளுக்கிடையில் விசிச்சவ்வு வளர்ந்து என்பு பொருந்தி பொருத்து விறைக்கும். பொருத்தைச் சற்று சற்றாய் ஆட்டி அசைத்து வரவேண்டும்.

***3. என்புக்கனதை:-*** பொருத்தினுள் இருக்கும் முருந்து புண்பட்டுப் போயின் பின்பு எலும்பின் அந்தலைகள் ஒன்றோடொன்று சேர்ந்து பொருந்திப் போவதால் அப்பொருத்து விறைத்து

அசையாதிருக்கும். இது மாறுவதிரிது ஆயினும் பொருத்தைக் கீறி துறந்து அதிற்சேர்ந்த எலும்பின் தலைப்புக்களை அரிந்து ஆப்புவடிவமுள்ள ஒரு துண்டை எடுத்து பின் பொருத்தை நாளுக்கு நாள் ஆட்டிவருவதால் சிலருக்கு மாறினதுண்டு.

***குணம்:-*** நோய் தொடங்கும் போது இடைக்கிடை உபாதை தோன்றும். பொருத்திலுள்ள முருந்தில் புண்படில் நோய் உபாதை அதிகரிக்கும். முள்ளந்தண்டில் உபாதை தொடங்கும்

நோயின் தொடக்கத்தில் ஓர் வலிப்பு குண்டியிலுள்ள பேசிகளில் உண்டாகும். இதனால் தொடை ஒரு பக்கத்துக்கு இழுபட்டுப் போகும். உறுப்புக்களில் நோய் கொண்டவுறுப்பு ஆரோக்கிய உறுப்பிலும் நீளம் குறைவாகக் காணப்படும்.

***பிரயோகம்:-*** நோய் தீவிர நிலையில் நோயாளியைப் படுக்கப்பண்ணி நோய் கொண்ட உறுப்பை தலையணை கொடுத்து அணைத்து வைத்து அட்டைவிட்டாவது, கொம்பு வைத்தாவது, இரத்தம் எடுத்து வெந்நீர்ச்சீலையிட்டு கலமலும், அபினும் சேர்த்து கொடுப்பதுமன்றி இரவில் அபினை மாத்திரம் முழுப்பிரமாணமாய் கொடுக்கவும். தாபிதம் சற்றே தணிந்தபின் கமக்கட்டு முதல் பாதமீறாக ஓர் நேரிய தப்பை வைத்துக் கட்டி உறுப்பை அசையாதபடி நேராய் வைக்க வேண்டும். மருந்துப்பாவனையில் நோயை மாற்றவும்.

## ***பொருத்தில் உண்டாகும் ஊறுகள்***

***பொருத்துக்காயம்:-***காயத்திலிருந்து நித்தைநீர் கொப்புளித்தாலும் பொருத்தினுட்புறம் தெரிந்தாலும் பொருத்து காயப்பட்டதென்று அறியலாம். பொருத்தின் பருமைக்கும், காயத்தின் தன்மைக்குத்தக்கதாய் பொருத்தில் உண்டுபடும் காயம் கடினம் பண்ணும். யாதொரு பொருதத்திலும் காயப்படும் போது அதிலெழும்பும் தாபிதற்தினாலே அபாயம் நேரிடும்.

***குணம்:-*** காயப்பட்டு சற்றுநேரம் சென்றபின் பொருத்து வீங்கும். சூடு கொள்ளும். வேதனை கூடவாகும். காயம் பெரிதாகில் நித்தையும், சுழும் கலந்து அதனின்று கொப்பளிக்கும். நிறிதாகி சீழ் கட்டுப்பட்டு பொருத்து வீங்கி காயப்பட்ட இடத்திலாவது, வேறு இடத்திலாவது உடைக்கும். உறுப்பை இடைக்கிடை இழுத்து வாங்கும். அது அசையும் போது வேதனை கூடும். இக்குணங்கள் கூடினால் நோயாளி மரணிப்பர். மரணியாமல் தப்பினால் பொருத்தைச்சுற்றி விப்பருதிகள் உண்டாகும். அதனின்று உண்டாகும் சீழினால் காய்ச்சல் உருவாகும்.

***பிரயோகம்:-*** யாதளொரு பொருத்துக் காயப்படும் போது காயப்பட்ட உறுப்பை காக்க வேண்டுமோ அல்லது சோதிக்க வேண்டுமோ எனத்தீர்மானிக்க வேண்டும். காயம் சிறிதாகில் அவ்வறுப்பை காப்பதே பிரயோகம். காயம் பெரிதாகில் காயத்தினளவையும், நோயாளியின் தேகக்கட்டமைப்பையும் பிரயோகத்தையும் தீர்மானம் பண்ணவேண்டும். வெட்டுக்காயமிருந்து காயப்பட்ட பொருத்து முழந்தாட் பொருத்தாய் இருந்தாலும் அவயவசேதம் செய்யக்கூடாது. பொருத்து உட்புறம் தெரியத்தக்கதாய் காயம் விஸ்தாரணமாயிருந்தால் அக்காயத்தோடு கூடப் பொருத்து விலகினாலும், எலும்பு முறிந்தாவது இருந்தாலும் அவயவசேதனம் செய்யும்படி இருக்கும உறுப்பைக் காக்க தீர்மானித்தால் காயத்தை சந்து செய்து ஒட்டுப்பற்றாவது கலோயிதம் எனும் மருந்தாவது இட்டு ஓயாதபடி தண்ணீர் வாாத்து தாபிதம் கொள்ளாமல் காத்துக் கொள்ள வேண்டும். இச்சமயத்தில் களியாவது, வெந்நீர்ச்சீலையாவது கட்டப்படாது. சீழ் கட்டினால் அது இலகுவாக புறப்படத்தக்கதாய் சத்திரமிட்டு களிகட்டி தேகத்தில் உண்டாகும் அழற்சி தணியும்படி ஏற்ற மருந்துகள் கொடுக்க வேண்டும்.

***பொருத்து விலகல்:-***

பொருத்துக்கள் விலகும் போது முற்றாய் கழன்று போகும். சிலவற்றில் முற்றும் கழராமல் ஒரு பகுதி மட்டும் கழன்று போகும். சில கழரும் போது தோல் வெடித்து காயம் ஏற்படும்.

சில யாதொரு புறக்காரணமில்லாமல் வலியக் கழலும். இதில தோட்பொருத்தும், தொடைச்சந்தமே அதிகமாக விலகக்கூடும். இது நடுத்தர வயதானவர்களுக்கே கூடுதலாக ஏற்படும்.
காரணம்:- பொருத்தில் படும் தாக்குதல்களினால் பேசிகளின் பக்கங்களில் எலும்பு விலகும்.

***குணம்:*** பொருத்தின் சாங்கம் மாறும், எலும்புகளைத் தடவும் போது அவைகளின் புடைப்புக்கள் நிலைபெயர்ந்ததாகக் காணப்படும். விலகின எலும்பின் அந்தலை வேறிடத்தில் தோற்றப்படும். உறுப்பின் நீளம் மாற்றமடையும். அதன் அசைவு அற்றுப்போகும். ஊறடைந்த உறுப்பும் அதனைச்சூழவும் வேதனையுண்டாகும். எலும்புகள் விலகுவதுமன்றி பொருந்துமிடத்தில் முறிந்து போகும்.. பொருத்துக்கு அணையாகவிருக்கும் முருந்து சேதப்படும். விசிகள் ஈர்ப்புண்டு, இணுங்குண்டும் போகும். பொருத்து கயலாயிருக்கும் பேசிகளும் தசைகளும் பெரும்பாலும் அறுந்து சுபாவமாயுள்ள இடத்தை விட்டுப் பிரிந்து நிற்கும். நாடி,நாளம்,நரம்புகள் அமத்தப்படும். தோல் பெரும்பாலும் ஈர்ப்புண்டிருக்கும். சில வேளைகளில் வெடித்துக் காணப்படும்.

விலகின என்பை நிலையத்தில் எடுத்துவிட்டால் அப்பொருத்திலும் அதைச்சூழவரவும் மாறுதல் உண்டாகும். எலும்பு வளர்ந்து நிலவும். எலும்பு விலகின பொழுது சின்னபின்னப்பட்டவைகள் யாவும் ஒன்றோடொன்று பின்னப்பட்டு வைரங் கொள்ளும். விலகின எலும்பு முறிந்த என்பைப் போல் அராத்தாது இருப்பதனாலும், அதைப்போல் ஆடாதிருப்பதனாலும் முறிவுக்கும், விலத்தலுக்கும் இடையேயான வித்தியாசம் இலகுவாக கண்டறியலாம்.

***பிரயோகம்:-*** விலகின என்பை நிலையில எடுத்து விடல் பிரயோகமாகும். விலகின எலும்பில் இருக்கும் பேசிகள் இப்பிரகோபத்திற்கு பெரும் தடையாகவிருக்கும். விலத்தின

எலும்பை நிலையத்தில் எடுத்துவிட எவ்வளவு காலம் பிந்துகிறதோ அவ்வளவுக்கு இத்தடையும் அதிகப்படுவதால் அங்கிடையூறு கண்டபின் இப்பிரயோகத்தைச் செய்ய வேண்டும். காலதாமதம் பண்ணினால் பேசிகள் சுருங்கிப் பொருத்தை இசைத்து விடுவதற்கு தடையாகவிருக்கும். அத்தடையிருந்தால் 'ஈதர்' எனும் மருந்தாவது அல்லது 'குளேபரோபோம்' எனும் மருந்தாவது கொடுத்து பேசிகளை இளக்கிவிடவும். இம்மருந்துகளினால் எப்பெயர்ப்பட்ட பலவானுடைய பேசிகளின் வலியை குறைத்து விலகிய எலும்பு இலகுவாக நிலையததில் வந்துவிடும். இதுவன்றி சோர்வுண்டாகத்தக்கதாய் இரத்தம் வாங்குவதும், அரைமணித்தியாலம் வரைக்கும் நோயாளியை வெந்நீரில் இருத்துவதும், அரைக்கிறேன் பிரமாணம் அந்திமணித்தாசு எனும் மருந்தைக் கொடுப்பதும் பேசிகளின் வலியைக்குறைப்பதற்கு பிரயோகங்களாகும். இடையூறுகளினால் உண்டாகும் சோர்வு தணியமுன் இப்பிரயோகங்களின்றி பொருத்தை இசைத்துவிடலாம். பொருத்தை இசைக்கும்படி முன்னே நின்ற இடத்தைத் திறமையாய்ப்பிடித்து அதன் சுயநிலைக்கு வரத்தக்கதாக இழுத்துவிட வேண்டும். எலும்பு நிலையத்தில் வந்துவிடும். பொருத்து நெட்டிமுறிந்தது போல ஒரு சத்தம் போடும். குளோரோபோம் மருந்து கொடுத்திருந்தால் இச்சத்தம் உருவாகாது. பொருத்தை இசைத்தபின் அதில் தாபிதம் கொள்ளாதபடிக்கு கடும்பத்தியம் சொல்லிவிட்டு விரேச்சனம் செய்துவிட்டு தண்ணீர்ச்சீலை இடவேண்டும். அறுந்த விசிகள் பொருத்தி மாறும்வரை 2-3 கிழமை பொருத்தை அசையாதபடி பாத்துக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாவிடில் அப்பொருத்து மறுபடியும் விலகக்கூடும்.

***மிசுரபெயர்ச்சி:-*** பொருத்து விலத்தியும், வெளியிற்காட்டும் காயப்பட்டிருந்தால் உறைச்சவ்வின் தீவிர தாபிதங் கொண்டு பொருத்துக்கு அணையாயிருக்கும் முருந்து புண்பட்டுச் சுகம் பேதப்பட்டு மிகுந்த போசமுண்டாகும். நோயாளி வயதாகியும், தேகம் சீர்கேடானதாயும் எலும்புந் ரோதலும் சின்னபின்னப்பட்டதாயும் இருந்தாலும் பெரிதான இரத்தக்

குழாய்கள் அறுந்திருந்தாலும் முழந்தாட்பொருத்தில் இவ்விடையூறு உண்டாகியிருந்தாலும் உறுப்பைச் சோதிக்க வேண்டிவரும். ஊறடைந்த உறுப்பைக்காக்க துணிந்தால் விலகின எலும்பைச் சுயநிலையில் எடுத்துவிட்டு காயத்தை விந்து இட்டு மூடிப் பொருத்திலுண்டாகும் காயத்துக்குச் செய்யும் பிரயோகத்தைச் செய்ய வேண்டும். எலும்பைச் சுயநிலைக் கெடுத்துவிடக்கூடாதபடிக்கு அது புறப்பட்டிருந்தால் அதன் தலையை அரிந்தாகுதல் காயத்தைப் பெருப்பித்தாவது நிலையில் எடுத்து விடவேண்டும். இவ்வூறு மாறிப் பொருத்து விறைத்துப் போகுமாதலால் உறுப்பு நிற்க வேண்டிய நிலையில் அதை வைத்துக் கொள்ளவும்.

***பொருத்து விலகலும் முறிவும்:-*** நீண்ட எலும்புகளில் யாதொன்று நடுவில் முறிந்தும் பொருத்தை விட்டுக்கழன்று இருந்தால் அதை நிலையில் எடுத்துவிடுவது சிறந்ததது. இதற்கு சிலர் முறிவை ஊறவிட்டு பின் பொருத்தை இசைக்க வேண்டும் என்று கூறுகிறார்கள். முறிவு ஊறுவரையும் விலகுதலைக்கவனியாதிருந்தால் விகற்பங்கள் உண்டாகும். முறிவு ஊறி எலும்பு பலப்புக் கொள்ள ஒரு கிழமைவரை செல்லும். அதன் பின் பொருத்தை இசைப்பதற்கு எலும்பில் பிடித்திழுக்க ஊறின எலும்பு விட்டுப் போகக் கூடமாதலால் முதற் பொருத்தை இசைத்துப் பின் முறிவுக் கேற்ற பிரயோகத்தைச் செய்வது நலம். இவ்விதஊறுண்டாகும் போது முதல் முறிவுக்குத் தப்பை வைத்துக் கட்டிப் பின் குளோரபோம் சுவாசிக்க கொடுத்து அறிவை மயக்கிக் கொண்டு உறுப்பை இழுத்துப் பொருத்தை இசைத்து விடவேண்டும். பொருத்தை இசைத்தபின் முறிவுக்கேற்ற பிரயோகத்தை செய்ய வேண்டும். பொருத்தில் நெடுநாட்பட்டிருக்கும் ரோகங்களில் அதன் பிசிகள் கெட்டு எலும்பின் அந்தலை பழுதடைந்து பொருத்து வலிய விலகிப் போகும். இவ்விதம் பெரும்பாலும் தொடைச்சந்தில் நோயுண்டாகும் போது சம்பவிக்கும். சிலருக்கு பொருத்தில் யாதொரு நோயுமில்லாமல் போருத்தை சூழ்ந்திருக்கும் பேசிகளில் திமிர்வாதம் உண்டாவதினாலாவது வாதம் கொள்வதினால்

எலும்பு தானாக விலகிப் போகும். இவ்வகையாய் எலும்பு ஒரு பொருதத்தில் மாத்திரம் விலகியிராமல் பல பொருத்துக்களில் விலகியிருக்கும். சிலருக்கு இவ்வூறு யாதொரு வேதனையில்லாமல் சடுதியாகச் சம்பவிக்கும். சிலருக்கு பொருத்தில் வாதப்பிடிப்புண்டாகிப் பின் எலும்பு விலகும். இவ்வகையாய் எலும்பு விலகும் போது பொருத்தை இசைப்பது மிகுந்த பிரயாசம். சிலருக்கு இலகுவாய் பொருத்தை இசைத்தாலும் எலும்பு திரும்ப திரும்பத் திரும்ப வழுகிப் போகும். அப்படி வழுவாதபடிப் பொருத்தைக் கட்டும் விசிகள் பலப்படையத்தக்கதாய் பொருத்தை இசைத்த பின் தப்பை வைத்துக்கட்ட வேண்டும். வாதரோகம் அடுத்திருந்தால் அதற்கேற்ற பிரயோகங்களை செய்ய வேண்டும். பேசிகளிலோ திமிர்வாதம் கொண்டிருந்தால் மின்சாரமேற்றித் தண்ணீர் எடுத்த உறுப்பை தேய்த்து வருவது நல்லது.

தொடைச்சந்து, தோள்மூட்டு,கைக்குழச்சு என்பன சிறுபாண்மையாய் பிறவியிலே விலகியிருக்கும். பிறவியிலே எலும்புகள் அந்தலைக்குறைவு கொண்டு அது விலகிப்போவதனால் பாதுகாப்பதரிது.

***அலகென்புப் பெயர்ச்சி:-*** இவ்வூறு மிகவும் அரிதாக ஏற்படும். சிரிக்கும் போதாவது, கொட்டாவி விடும் போதாவது, வாய் விசாலமாய்த் திறபடுவதினாலாவது வாய் திறந்திருக்கும் போது கதுப்பில் அடிபடுவதனால் அலகென்பு விலகிப் போகும்.

***குணம்:-*** வாய் திறந்திருக்கும், மோவாய் நீண்டிருக்கும், விழுங்க, பேச ஒன்னாது. உமிழ்நீர் வடியும். கதுப்புப்படாதிந்திருக்கும். காதடிபள்ளமாயிருக்கும். கண்ணுக்கும், காதுக்கும் இடையேயுள்ள பள்ளத்தில் ஓர் புடைப்புத்தோன்றும். அலகென்பின் ஒரு பக்கம் மாத்திரம் பெயர்ந்தால் மோவாய் விலகாத பக்கத்தை நாடும்.

***பிரயோகம்:-*** நோயாளியின் தலையை ஒரு ஆள் தாங்கிக்கொள்ள கைப்பெருவிரலிரண்டையும் சீலையாற் சுற்றிக்

கொண்டு விரல்களால் மோவாயை உயர்த்திப் பின்னுக்கு தள்ள எலும்பு சுயநிலையில் போய் விழும். எலும்பு ஒரு பக்கத்தில் மாத்திரம் விலகிநின்றால் அப்பக்கத்திற்கு மாத்திரம் விரலைக் கொடுத்து எலும்பை நிலைக்கெடுத்து விடவேண்டும். இவ்வாறு எலும்பை நிலையெடுத்த பின் முறிந்தாற் கட்டுவது போல் தோற்சீலையால் 2 கிழமைக்கு கட்டிவைத்து பால்கஞ்சி முதலிய ஆகாரங்கள் கொடுத்து நோயாளியை பேசவிடாமலும், அலகாட்ட விடாமலும் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். எலும்பு விலகி நெடுநாட் சென்றாலும் இவ்வாறு நிலையெடுத்து விடலாம்.

***செத்துருவென்புப் பெயர்ச்சி:-***

இவ்வென்பு முறிகிற அளவிற்கு விலகுவதரிது. இது நெஞ்சோடு பொருந்தியிருக்கிற பொருத்தையாவது விட்டு விலகிப் போகும். இந்த இரண்டு பொருத்துக்களையும் ஒருமிக்க விட்டுவிலகுவதுண்டு. இவ்விலகல் தோள்மூட்டு அடிபடுவதாலும், கையை உயர்த்தும் போது முழங்கை அடிபடுவதாலும் இந்நிகழ்வு ஏற்படும். இதில் செந்துருஎன்பு நெஞ்சென்பை விட்டு விலகி முன்னுக்கு நிற்கும். நெஞ்சென்பின் முன் பக்கம் தடவிப்பார்த்தால் அந்தலை முன்னுக்கேறிட்டு நிற்பது விளங்கும். செத்துரு என்பு முறிந்தால் செய்யும் பிரயோகத்தையே செய்ய வேண்டும். செந்துருவென்பு பின்நோக்கி விலகினால் சுவாசக்குழாயில் என்பு போய் பொறுத்து மூச்சுவிடக்கஷ்டமாகும். நோயாயின் தோட்பட்டையில் கையைக் கொடுத்து ஒருவர் மூட்டை பெயாத்து பிடித்துக்கொள்ள வைத்தியர் தன் கையை பொத்தி நோயாளியின் கமக்கட்டுக்குள் கொடுத்து முழங்கையை விலாமேலுயர்த்தி விலகின எலும்பை சுயநிலைக்கு எடுத்துவிட வேண்டும். அது வழுவாதபடி முறிவுக்கு கட்டுவது போல் 8 இச்சாங்களாய்த் தோள்மூட்டிரண்டையும் சுற்றிக்கட்ட வேண்டும். செத்துருஎன்பு நெஞ்சென்பை விட்டு விலகி மேலுக்கு ஏறிவிட்டால் அந்தலையை தடவிப்பார்க்க தெரியும். முழங்கையை உயர்த்தி எலும்பை நிலையிலிருந்து விலத்தி அவ்வெலும்பின் முறிவைக்கட்டுவது போல் கட்ட வேண்டும். செத்துருஎன்பு நெஞ்வென்பொடு பொருந்தியிருக்கும் பொருத்தில் விலகுவதிலும் வாயென்பொடு பொருந்தியிருக்கும் பொருத்து விலகுவது பெருவழக்கம். அது

விலகும் போது மேலுக்கேறிட்டுக் கொள்ளும். தோள்மூட்டு பதிந்து பரந்திருக்கும். இவ்வெலும்பின் முறிவிற்கு செய்யும் பிரயோகத்தைச் செய்ய வேண்டும்.

***தோட்பொருத்துப்பெயர்ச்சி:-*** எந்த பொருத்தைப் பார்க்கிலும் தோட்பொருத்து விலகுவது வழக்கம். அது விலகும் போது புயவென்பின் மேலந்தத்தில் பொருத்தைவிட்டு பெயர்ந்து பதிந்தாவது அல்லது முன்தூங்கியவாறு அல்லது பின்தூங்கியவாறு ஏறிட்டு நிற்கும். அது பதியும் போது அதன்அந்தலை பழுவென்புகளும், பேசிகளுக்குமிடையே கமக்கட்டைப் பொறுத்து அங்குள்ள நாடாக்களையும் நரம்புகளையும் நசுக்கும்.

***குணம்:-*** கமக்கட்டுக்குட் தடவிப் பார்க்க எலும்பின் அந்தலை தெரியும். புயம் ஒரு இஞ்சிவரை நீண்டிருக்கும். முன்கை சற்றே மடக்கி நிற்கும். கைவிரல் விறைக்கும். முழங்கை சரீரத்தை விட்டுப் பிரிந்து நிற்கும். கமக்கட்டுக்குட் தடவும் போது எலும்பின் அந்தலை தெரியாதிருந்தால் முழங்கையை உயர்த்திக் கொண்டு தடவிப்பார்த்தால் தெளிவாய் விளங்கும். எலும்பு முன்னுக்கு நேரிடும் போது அதன் மேலந்தலை செத்துருவென்பின் கீழ் பக்கத்தே 2ஆம் 3ஆம் பழுவென்புகளில் பொறுத்து நிற்கும்.

செத்துரு என்பின் கீழ்த்தடவிப் பார்க்க புயவென்பின் மேலந்தலை நிற்பது விளங்கும். புயங்குறுகும். முழங்கை பின்னுக்கு சரிந்திருக்கும். முழங்கை பழுவோடணையாது. எலும்பு பின்னுக்கேறிடும் போது அதன் மேலந்தலை முதுகுப்புறத்தில் வாகென்பின் மேல் போய்ஏறி பொறுத்து நிற்கும். புயத்தில் பிடித்தாட்டிக்கொண்டு முதுகில் தடவிப் பார்க்க எலும்பின் அந்தலை நிற்பது விளங்கும். இவ்விதமாய் இப்பொருத்து விலகுவதேயன்றி சிலருக்கு இது முற்றாக விலகாமல் சற்றே வழுவி நிற்கும்.

***பிரயோகம்:*** இப்பொருத்தை இசைப்பதற்கு 3 வகையுண்டு.

1. நோயாளியை மல்லாந்து படுக்கப்பண்ணி அவனுடைய கால் மட்டத்திலிருந்து எலும்பின் அந்தலையை

அமர்த்தத் தக்கதாய் குதிக்காலை கமக்கட்டுக் குட்கொடுத்து கொண்டு முழங்கையில் பிடித்திழுக்க கையை நோயாளியினுடைய மேலுக்கு எடுக்க எலும்பு இடுப்பிற் போய் விழும். எலும்பு கமக்கட்டுக்குள் நின்றாலும், நெஞ்சில் நின்றாலும், முதுகில் நின்றாலும் இவ்வகையாக இழுத்துவிடலாம்.

2. நோயாளியை ஒரு நாற்காலியில் இருத்தி முழந்தாலை கமக்கட்டுக்குட் கொடுத்து ஒரு வகையாற் தோட்பட்டையைப் பிடித்துக்கொண்டு மற்றக்கையால் முழங்கையிற் பிடித்தமர்த்தியிழுக்க எலும்பில் இடுப்பிலே போய் விழும்.

3. நோயாளியை மல்லாந்து படுக்கப்பண்ணி அவன் தலைப்பாட்டிலிருந்து மற்றக்கையால் புயத்தைப்பிடித்துத் தலையின் பக்கவாய் நெருக்கி இழுக்க எலும்பு இடுப்பில் விழும். எலும்பு முற்றும் விலகாமல் வழுவி இருந்தால் கையிற் பிடித்திழுக்க நிலையில் போய் விழும்.

பொருத்தில் தாபிதம் எழுந்தால் அட்டைவிட்டு தண்ணீர்ச்சீலை யிட்டு வரவேண்டும். இப்பொருத்து விலகலோடு காயம் கூடியிருந்தால் கூடியளவு விரைவாய்ப் பொருத்தை இசைத்து காயத்தை மூடிக் கட்டி தாபிதம் எழும்பாதபடிக்குத் தண்ணீருமிட்டு வேறு ஏற்ற பிரயோகங்களும் செய்ய வேண்டும். காயம் விசாலமானதாக இருந்தால் இரத்தக்குழாய்கள் சேதப் படாமல் இருந்தால் உறுப்பை சோதியாமல் பொருத்தையிசைத்துக் காயத்தை கட்டி அவ்வுறுப்பை காக்க வேண்டும். கைக்கு இரத்தம் செல்லாமல் நாடியறுந்தால் அவ்வுறுப்பை பொருத்தில் சோதிக்க வேண்டும். பொருத்தும் விலகி எலும்பும் நடுவில் முறிந்திருந்தால் முறிவைத்திரப்படுத்திக் கொண்டு பொருத்தை இசைத்து பின்பு முறிவுக்குத் தப்பை வைத்துக்கட்டி அதற்கேற்ற பிரயோகம் செய்ய வேண்டும்.

***முழங்கை பொருத்துப் பெயர்ச்சி:-*** முழங்கையில் படும் தாக்கத்தினால் அப்பொருத்துப் பல போதமாய் பெயரும்.

முன்கையிலுள்ள எலும்புகளில் ஒன்றாவது, இரண்டாவது, இரண்டும் ஒருமித்தாவதும் விலகினத்தக்கதாய் இப்பேதம் உண்டாகும். முன்கையிலுள்ள எலும்புகள் இரண்டும் ஒருமிக்க விலகியும், புயஎன்பின் பிற்பக்கமாய் ஏறிட்டு நிற்பதே பெருவழக்கு. இவ்வூறுண்டாகையில் முழங்கை சரி கோணமாய் மடங்கி நிற்கும். அசைவு கொள்ளாது. புயவென்பின் கீழந்தலை முழங்காலின் முற்பக்கமாய் ஏறிட்டு புடைத்திருக்கும். முன்கையில் உள்ள அரந்தி என்பின் கூபாவிகம் முழங்கையின் முழங்கையின் பிறபக்கத்திலுள்ள மிகுந்த புடைப்பாய் தெரியும். முன்கையிலுள்ள எலும்புகளிரண்டும் ஒருமிக்க விலகி முன்னுக்கு ஏறிடுவது அரிது. அப்படிச்சம்பவிக்குமானால் அரந்தி என்பின் கூபரவீக்கம் முறிந்திருக்கும். முன்கை நீண்டிருக்கும். அதிகமாய் ஆடும். புயவென்பின் பிற்பக்கத்தை தடவிப்பார்க்க முறிந்த எலும்பெல்லாம் முறிந்திருப்பது விளங்கும். முன்கை என்புகள் இரண்டும், முழங்கைக்கும் அகமாயாவது, புறமாயாவது விலகுவது மிகவும் அரிது. விலகும் போது முற்றாய் விலகாமற் சற்றே வழுவி ஆரை என்பின் தலை புயவென்பின் அகமுறியிலாவது அரந்தி என்பின் புறமுறியிலாவது தடங்கி நிற்கும்.

முன்கையிலுள்ள என்புகள் ஒவ்வொன்றும் தனித்தனியாய் விலகி நிற்கும். அவற்றுள் அரந்தி என்பு தனித்து பெயர்ந்து புயவென்பின் பிற்பக்கமாய் மாத்திரம் ஏறிட்டு நிற்கும். அப்படிச்சம்பவித்தால் அவ்வென்பின் கூபரவிகம் புயவென்பின் பின்னாகப் புடைப்பாய்த் தோன்றும். முன்கை திருகி நிற்கும். உள்ளங்கையே மேலும் கீழும் புரட்டத்தக்கதாய் ஆரையென்பு தனித்து பெயர்ந்து புயவென்பின் முன்னாவது, பின்னலாவது, புறமாவாது ஏறிட்டு நிற்கும். முன்னிற்கு ஏறிடுவதே பெருவழக்கு அப்படி ஏறிட்டு இருக்கில் முன்கை சற்றே மடங்கி நிற்கும். உள்ளங்கையை முற்பக்கமாய் புரட்டும் போதும், கையை நீட்டும் போதும் மிகுந்த வேதனையுண்டாகும். முழங்கையை மடக்கக்கூடாதபடிக்கு இவ்வெலும்பின் மேலந்தலை புயவென்பின் முற்பக்கத்தைத் தட்டும். புறங்கையை மேற்பக்கமாய் திருப்பக்கூடியதேயன்றி உள்ளங்கையை மேற்பக்கமாக

புரட்டக்கூடாது. உள்ளங்கை அடிபடவிழவதனாலும் இவ்வெலும்பு இவ்வண்ணமாய் முற்றும் விலகாமல் சற்றே வழுவி நிற்கும். அப்போது இக்குணங்கள் யாவும் உண்டுபட்டாலும் சற்றே குறைவாய் இருக்கும். தோள்மூட்டில் விரல்படத்தக்கதாய் கையை மடக்கக்கூடாதிருப்பதே இதன் விஷேஷித்த குணமாகும்.

ஆரையென்பு புயவென்பின் பிற்பக்கத்தில் ஏறிட்டுக் கொள்வது மிகவரிது. அப்படி ஏறிட்டால் புயவென்பின் புறமுளிக்கு பிற்பக்கத்தில் தடவிப்பார்க்க இவ்வாரையென்பின் மேலந்தலை நிற்பது விளங்கும். இது ஆடுவது மிக அற்பம். ஆடும்போது வேதனை அதிகமாகும். இவ்வெலும்பு புயவென்பின் பிற்பக்கத்தில் ஏறிடுவதிலும் அதன் புறவளத்தில் ஏறிடுவது மிகுதி. அப்படி ஏறிட்டாற் புயவென்பின் புறமுனியில் புறப்பக்கமாய் நிற்கும். பொருத்தில் உண்டாகும் அசைவுகளுக்குத் தடையாகும்.

சிலருக்கு முன்கைஎலும்பின் அரந்தி என்பு புயவென்பின் பிற்பக்கமாய் ஆரைஎன்பு அதன் முற்பக்கமாக விலகி வெவ்வேறிடத்தில் நிற்கும். இவ்வூறு உள்ளங்கை அடிபடவிழுந்து முன்கை திருகுப்படுவதனால் பெரும்பாலும் சம்பவிக்கும். முள்ளங்கை பொருத்து விலகும் போது புயவென்பின் முறிகளும் அரந்தி என்பின் கூபரவிகளும் பெரும்பாலும் முறியும். இவ்வூறுடன் வீக்கம் சடுதியாக உண்டாவதால் அதை நிதானிப்பது மிகவும் வேண்டியதாகும்.

***பிரயோகம்:-*** அரந்தி என்பு விலகினதும் விலகாததற்கு தக்கதாய் பிரயோகம் வேற்றுமைப்படும். அது எந்த வளத்தில் விலகிநின்றாலும் அதனோடு கூட ஆரைஎன்பு விலகினாலும் விலகாதிருந்தாலும் அதன் புடைப்புக்கள் புயவென்பின் அந்தலையில் முட்டி அதைச்சுயநிலையில் எடுத்து விடுவதற்கு தடையாய் இருக்கும். அது விலகிற போது இப்புடைப்புகள் முறிந்து போனால் யாதொரு தடக்குமில்லாமல் அதிக இலகுவாக சுயநிலைக்கு வரும். யாதொரு முறிவில்லாமல் அரந்தி என்பு விலகிநின்றால் நோயாளியை ஆசனத்திலிருத்தி வைத்தியர் தன்

காலை அவ்வாசனத்தில் பொறுக்க வைத்து விலகி நிற்கும் முழங்கையில் மடக்கி தனது முளந்தாளைக் கொடுத்து கையிரண்டாலும் முன் கையிற் பிடித்து மடக்க நிலையில் வரும். ஆரைஎன்பு விலகிநின்றால் முழந்தாலைக் கொண்டு மடக்கத் தேவையில்லை. புயத்தை திரமாய்ப்பிடித்துக் கொண்டு கைக்குழச்சில் பிடித்துக் கைப்புயம் நன்றாக நேருக்குவர இழுத்து முளங்கையை மடக்க இவ்வெலும்பு நிலையிற் போய்விழும். பொருத்தை இசைத்த பின் பக்கங்களுக்கு வளைவான தப்பை வைத்துக் கட்டிப் பெருவிரல் மேலுக்கு நிக்கத்தக்கதாய் ஏந்தானத்தில் தூக்கிவிடவேண்டும். தாபிதம் உண்டாகில் அட்டைவிட்டுத் தண்ணீர்ச்சீலைவிட்டு அதைத்தணித்த பின் பொருந்தியுள்ள விறைப்பு நீங்கும்படி தண்ணீர் எறிந்து உப்பைத்தேய்த்து வரவேண்டும். பொருத்தும் விலகிப் பொருந்தும். அந்தலைகளில் எலும்பு முறிந்து ஊறுப்படின்னதென்று அறியக்கூடாதபடிக்கு வீக்கம் உண்டாகியிருந்தால் உறுப்பை இழுத்து மடக்கி எலும்புகள் நிற்கவேண்டிய நிலையங்களில் அவைகளைக் கூடிய வரையில் இணக்கமாக வைத்து கோனற் தப்பைகளினால் கட்டி வைக்க வேண்டும். 4-5 கிழமை சென்றபின் பொருத்து முழுதும் விறைத்து போகாதபடி ஆட்டியசைத்து வர வேண்டும்.

***கைக்குழைச்சுப் பெயர்ச்சி:-*** முன்னங்கை என்புகளைவிட்டுக் கைக்குழைச்சுப் பெயர்ந்தாற் கை, முன்கைக்கு முற்பக்கமாவது, பிற்பக்கமாவது ஏறிட்டு நிற்கும். அவ்வெலும்புகளில் ஒன்றை மாத்திரம் விட்டுப் பெயர்ந்தால் கைபுரண்டு நிற்கும். கையை இழுக்கச் சுயநிலையில் வரும். அந்நிலையில் நிற்கும்படி முன்னும் பின்னும் தப்பை வைத்துக் கட்டி விடவேண்டும்.

***கையிலுள்ள பெயர்ச்சிகள்:-*** கைக்குழைச்சிலுள்ள கட்டையான சிறு எலும்புகளில் அவைகளைக் கட்டும் விசிநுகைவதனால் பொருத்தை விட்டு விலகிப் புறங்கையில் புடைத்திருக்கும். இதற்கு தண்ணீர் எறிந்து உறுப்பைத் தேய்த்துச் சீலையாற்சுற்றி வரச் சுகமாகும். கைகாலில் உள்ள விரலென்புகளைக் கட்டும் விசிகள்

உரப்பும் இறுக்கமாயிருப்பதனால் விலகின எலும்பை நிலையெடுத்து விடுவதற்குப் பிடித்திருக்கக்கூடிய இடம் மிகச்சிறியதாய் இருப்பதனால் இவ்வெலும்புகள் விலகும் காலத்தில் சுயநிலைக்கு எடுத்துவிடுவது மிகவும் பிரயோசனமாகும். விரலில் நாடா முடிந்து இழுப்பது உத்தமம்.இழுக்கும் போது விரல் மடக்கும் பேசிகள் நுகையத்தக்கதாய் அவ்விரலை உள்ளங்கைக்கு நேராய்ச்சரித்து இழுக்கவேண்டும்.

*பளுவென்புப்பெயர்ச்சி:-* பளுவென்பின் அந்தலையிலுள்ள முருந்து நெஞ்சென்பை விட்டும், முதுகடியுண்டன விழுவதினாற் பளுவென்பு முள்ளந்தண்டைவிட்டும் பெயாந்து போகும். நெஞ்செலும்பு சிலருக்குத் துண்டுதுண்டாய் விலகிப் போகும்.இவ்வகையான ஊறுகள் மிகவும் அரிதாகவுண்டாகும். இவ்வெலும்பு முறிந்தால் செய்யும் பிரயோகத்தையே இதற்கும் செய்ய வேண்டும்.

*இடுப்புச்சந்துப் பெயர்ச்சி:-* இது 4 விதமாக பெயர்ந்து போகும்.

1. தொடையென்பு இடுப்புப்பொருத்தை விட்டு விலகி மேலுக்கேறிட்டு நிற்கும்.
2. அது முதுகுக்கேறிட்டு நிற்கும்.
3. கீழுக்கு இறங்கி நிற்கும்
4. முன்னுக்கேறிட்டு நிற்கும்.

இதில் தொடையெலும்பு மேலேறி நிற்பதே பெருவழக்கம். இது நிகழும் போது நிலைபெயர்ந்த உறுப்பு அதற்கிணையான உறுப்பிலும் 1-2 இஞ்சி குறுந்திருக்கும். கால்விரல்கள் அடுத்த காலிற் பாதத்தில் போய் பொறுக்கும். முளந்தால் அகப்பக்கமாய் புரண்டு மற்ற முழந்தாளில் மேலேறி நிற்கும். காலை அகப்பக்கமாய் புரட்டுவதன்றி புறப்பக்கமாய் புரட்டக்கூடாது. பிரயோகம்:- இரத்தம் எடுத்தாகிலும், குளோரோபோம் கொடுத்து மயக்கியாயினும், பேசிகளின் பெலப்பைக் குறைத்து ஒரு

கட்டிலில் நோயாளியை படுக்கப்பண்ணவும். ஒரு பலமான சீலையை கமக்கட்டுக்குள் கட்டிப் பின்பு முளங்காலுக்கு மிதக்க ஒரு சீலை சுற்றி அதன் மேல் கம்பிகளின் வாரைப்பூட்டி அக்கம்பிகளை ஓரிடத்தில் பலனாகக் கட்டி இத்தொடை மற்றத்தொடையின் முழந்தாளுக்குச் சற்று மேலே குறுக்காய் வரத்தக்கதாக இழுத்து பின்பு அவ்வுறுப்பைப் பிடித்து மெதுவாய் ஆட்ட அல்லது உயர்த்த எலும்பு சுயநிலையில் போய்விழும். விழுந்த பின் தொடையிரண்டையும் கூட்டி படுக்க விடவேண்டும்.

தெடை எலும்பு விலகி முதுகில் ஏறிட்டு நின்றால் அவ்வுறுப்பு 1இஞ்சி வரை குறுகும். அதன் விரல்கள் மற்றக்காலிற் பெருவிரலிற் போய்ப் பொறுக்கும். முழந்தாள் கொஞ்சம் அகப்புறமாய் புரண்டு நிற்கும்.

***முழந்தாட் பொருத்துப் பெயர்ச்சி:-*** தொடைஎன்பை விட்டு காலென்பு விலகுமாகிற் பல முறையும் உயர இருந்து விழுவதினாலும், வண்டிலோடும் போது அதிலிருந்து குதிப்பதனாலும் சம்பவிக்கும். இது நிகழ்ந்தால் பொருத்து முழுதும் விட்டுப்பபோகாமல் தொடைஎன்பின் முன்னையாவது, பின்னையாவது, பக்கங்களிலாவது காலென்பு சற்றே வழுவி நிற்கும். காலென்பு தொடையென்பை விட்டு ஒரு பக்கத்துக்கு விலகி நிற்பதே பெருவழக்கம். இவ்வகையாய் விலகும்போது அதன் மேல் தொடைஎன்பின் அகமுனையாவது, புறமுனையாவது பொறுப்பாயிருக்கும். இவ்வூறு உண்டானால் முழந்தால் மடக்கி நிற்கும். முழந்தாட்சில்லைக் கட்டும் விசி நின்ற இடம் பதிந்திருக்கும். காலை நீட்டும் பேசிகள் நுகைந்திருக்கும். தொடையை வயிற்றேட சேர்த்து மடக்கிக் காலை நீட்டி அங்கிருந்து புரட்ட சுயநிலைக்கு வரும்.

காலென்பு தொடையின் பின்பக்கமாய் ஏறிட்டு நின்றால் அந்தங்கெடும், பொருத்து ஆடுதற்கு தடைப்படும். அவ்வுறுப்பு 2 இஞ்சி குறுத்திருக்கும். முழந்தால் இடுக்கில் தடவிப்பார்த்தால் காலென்பின் அந்தத் தலை தெரியும். முழந்தாட்சில்லுக்குக் கீழ்ப்படப் பொருத்து பதிந்திருக்கும். இவ்வென்பு விலகிற்

தொடையென்புக்குப் பிற்பக்கமாய் ஏறிடுவதனாலும், முற்பக்கமாக ஏறிடுவது மிகுதி. இதுவுண்டானால் முழந்தாள் அடுக்கில் தொடையென்பின் கீழ்த்தலை புறப்பட்டு நிற்கும். காலென்பின் மேலந்தலை முழந்தாளுக்கு முற்பக்கமாய் புடைத்திருக்கும். இப்புடைப்பிற்கு மேற்பட்ட மிகுந்த பதிவுண்டாக்கும். கணைக்கால் அகவளைவாது, புறவளைவாது புரண்டு நிற்க 2 இஞ்சி குறுகும். பிருயோகம்:- தொடையைச் சற்றே மடக்கித் திரமாய்ப்பிடித்துக் கொண்டு காற்குழைச்சிற் பிடித்து இழுத்து சுயநிலையில் எலும்பை எடுத்துவிட்டு தப்பை வைத்துக்கட்டி தாபிதத்தைத் தணித்து 2 கிழமைக்கு பொருத்தை அசையாதபடி காத்துக்கொள்ள வேண்டும். இப்பொருத்து விலகுவதோடு காயங்கூடி அக்காயம் அதிக பெரிதாயும், சின்னபின்னப்பட்டதுமாகி இருந்தால் மிக மோசமுண்டாக்கும்.

***முழந்தாட் சிற்பெயர்ச்சி:-*** இவ்வெலும்பு முழங்தாளுக்கு அகப்புறமாக அல்லது புறப்பக்கமாகவாது விலகிநிற்கும். புறப்பக்கமாய் விலகி நிற்பது பெருவழக்கு. முழந்தால் சில்லு பெயர்ந்தால் முழந்தாளின் முற்புறம் சப்பளித்திருக்கும். தடவிப்பார்த்து எலும்பு நிற்கும் இடம் விளங்கும். முழங்கால் மடங்காதிருக்கும். முழந்தாட்சில்லில் தாக்கமேற்பட்டாலும் காலை நீட்டும் தொழிலையுடைய பேசிகள் சடுதியாகச் சுருங்குவதனால் இவ்விடையூறு உண்டாகும். நோயாளியைத் தொடையை மடக்கிக் காலையுயர்த்தி மல்லாந்து படுக்கப்பண்ணிக் கொண்டு சில்லின் உள்வளத்தை உயர்த்திப் புறவளத்தை அமர்த்தித் தள்ளிவிட அது நிலையில் போய்விழும். இச்சில்லு அருகுப்பாடாகப் புரண்டு ஒரு அருகு தொடையென்பின் முளியிலும், மற்றொரு தோலிலும் பொறுக்கும். சிலருக்கு இச்சில்லின் முற்பக்கம் சற்றுப்பின்பக்கமாய் காட்டத்தக்கதாக அதுபுரண்டு நிற்கும். சில்லு புரண்டு நிற்பதும் அதனிருபக்கத்திலும் பள்ளம் விழுந்திருப்பது தடவிப்பார்க்க விளங்கும். உறுப்பு முற்றாக நீண்டு மடங்காதிருக்கும். இவ்விதமாய் சில்லு பெயர்ந்தால் அதை நிலையெடுத்து விடுதல் நலம். தொடையில் பேசிகளை நுகைத்துச் சில்லைக்கையால் அமர்த்தி நிலையிலெடுத்து விட வேண்டும். அது கூடாதவகையில்

நோயாளியை நடக்காவது, காலைபுரட்டவாவது, உதறவாவது செய்தால் எலும்பு நிலையிற் போய்விழும்.

***காற் குழைச்சுப் பெயர்ச்சி:-*** காலென்புகளை விட்டுச்சாரியென்பு பாதத்தோடு கூட விலகும் போது பாதம் பக்கங்களுக்காவது, பின்னுக்காவது, முன்னுக்காவது ஏறிட்டு நிற்கும். குதிக்கும் போது, ஓடும் போது பாதம் புரண்டு இவ்வூறு உண்டாகும். காற்குழச்சு பெயரும் போது பாதம் புறப்பக்கமாய் ஏறிட்டுக் கொள்வதே பெருவழக்கு. இவ்விதம் ஏற்பட்டால் காலின் புறப்பக்கத்தில் உள்ள சின்ன எலும்பு முறிந்து முறிந்து குழைச்சின் மேறபக்கம் பதிந்திருக்கும். உள்ளங்கால் புறவளமாய்ப்புரண்டு நிற்கும். குழைச்சு பெயர்ந்து பாதம் அகப்பக்கமாய் ஏறிட்டு நின்றால் காலின் அகப்பக்கத்திலுள்ள பெரிய எலும்பின் சீழ்முனை முறிந்திருக்கும். காற்படத்தின் புறவோரம் நிலத்தில் பொறுக்கும். உள்ளங்கால் அகப்பக்கமாய் புரண்டு நிற்கும் இவ்விதம் பாதம் புரண்டு போவது அபூர்வம்.

குழைச்சு பெயர்ந்து பாதம் பின்னுக்கு ஏறிட்டு நின்றால் சரவென்பு முறிந்திருக்கும். நளவென்பு முன்னுக்கு ஏறிட்டுக் கொள்ளும். பாதம் குறுத்துக் கொள்ளும். குதிநெடுத்திருக்கும். கால்விரல்கள் கீழ் நோக்கியிருக்கும். பாதம் முன்னுக்கேறிட்டால் நீண்டிருக்கும்.

***பிரகோபம்:-*** ஊறு உண்டாகியிருக்கிற பக்கத்துக்கு நோயாளியை படுக்கப்பண்ணி முழந்தாளை மடக்கி ஒரு ஆள் பிடித்துக் கொள்ள குதியிலும், பாதத்திலும் பிடித்து இழுத்து சுயநிலைக்கு விடவேண்டும். பின் தப்பை வைத்துக்கட்ட வேண்டும்.

கால்குழைச்சு விலகும் போது பெரும்பாலும் அதிற காயங்காணும். இக்காயம் விரைவாக மாறாதிருக்கில் குழைச்சில் தாபிதம் உண்டாகி 5-6நாளுக்குள் சீழ் கட்டி பொருத்துக்கு அணைவாய் இருக்கும் முருந்து புண்பட்டு பின் தசையை கும்மி புண் ஆறும். இவ்விதமாக புண் ஆற 2-12 மாதம் வரை செல்லும்.

முதல் காயத்தை வென்னீரால் அலம்பி சின்னபின்னப்பட்ட எலும்பிருந்தால் அதை எடுத்து பின்பு விலகின எலும்பை

சுயநிலைக்கு எடுத்துவிட வேண்டும். எடுத்துவிட்ட பின் காயம் கூடவாகவிருந்தால் முறிவிற்குச் செய்யும் பிரயோகத்தை செய்ய வேண்டும்.

***சாரியென்புப் பெயர்ச்சி:-***

இவ்வென்பு குதியென்பையும் நல்வென்பையும் விட்டு பலவாக விலகி நிற்கும். சிலருக்கு இவ்வென்பு விலகிப்போய் குதியென்பின் புறவளத்தில் போய் பொறுக்கும். இவ்வெலும்புப் பெயர்ச்சியொடு காயங்கூடாதிருந்தால் உறுப்பையிழுத்து எலும்பை சுயநிலைக்கு கொண்டு வர வேண்டும். காயம்கூடி எலும்பைச் சுயநிலைக்கு எடுத்துவிடமுடியாமலிருந்தால் அதை வெட்டிஅறுத்து விடவேண்டும். அவ்வென்பு பாதத்தையும், காலென்பையும் விட்டு விலகிற் காற்குழைச்சிக்கு முன்னாவது, பின்னாவது புறப்பட்டு நிற்கும். பின்னால் புறப்படுவதிலும் முன்னால் புறப்படுவதே பெருவழக்கு. முன்னால் புறப்பட்டால் அவ்வென்பின் தலை குழைச்சுக்கு அகவளையாவது புறவளையாவது புரண்டு நிற்கும். பின்னால் புறப்பட்டால் எலும்பு புரளாமல் நளகவென்பிற்கு குதிநாருக்குமிடையில் நிற்கும். இவ்விதமாய் எலும்பு முழுவதும் விலகாமற் சற்றே வழுவி நின்றால் அதை நிலையிலெடுத்து விடுவது கூடாத காரியம்.

## *முள்ளந்தண்டின் ரோகங்கள்*

***பக்கவளைவு:-*** 12-18 வயது வரையுள்ளவர்களுக்கு வருவதுண்டு. முள்ளந்தண்டில் உள்ள விசிகளும், பேசிகளும் துர்பலப்பட்டு நுகைவு கொண்டு போவதனால் முள்ளந்தண்டு மேலங்கங்களில் பாரத்தை தாங்கமாட்டாமல் ஒரு பக்கத்திற்கு வளையும்.

***குணம்:-*** வலப்பக்க தோள்மூட்டுவிலாவும் மிதந்தும், குவிந்தும், இடப்பக்க தோள்மூட்டும் விலாவும் பதிந்தும், கவிழ்ந்தும், இடப்பக்க ஒக்கலை புடைப்பாயிருக்கும். முள்ளந்தண்டுf இச்சாங்கமாய் வளைந்திருக்கும்.

***காரணம்:-*** ஒரு காலைப்பார்க்க மற்றக்கால் இறுப்பதனாலும், ஒரு சந்துக்கிருப்பதனாலும், உயர்ந்த தலையணை வைத்து ஒரு பக்கத்திற்கு எப்போதும் படுப்பதனாலும், எப்போதும் ஒரே ஒக்கலையில் சுமை ஏற்றிக் கொள்வதனாலும் இந்நெளிவு உண்டாகும்.

***பிரயோகம்:-*** மேற்கூறிய காரணங்களையெல்லாம் கூடியளவு நீக்கி அயம் சேர்ந்த மருந்துகள் பலத்தை உண்டாக்கும்.

நோயாளியை நீட்டி மல்லாந்து படுக்கும்படி பண்ணிக்கொள்ளவும். வியாதி அற்பமாகில் இப்பிரயோகங்களால் முற்றும் மாறும்.

***கோணற் கூன்:-*** முள்ளெலும்பு கொந்தையாவதிலும், முள்ளெலும்புகளுக்கிடையில் உள்ள சவ்வு புண்படுவதினாலும் முள்ளந்தண்டு வளைந்து போகும்.

***குணம்:-*** கால் விறைக்கும். குறண்டல், சோர்வுண்டாகும். மலம் புரளும். சிலருக்கு சலம் போக கஷ்டப்படும். முதுகில் உபாதை காணும்.

***பிரயோகம்:-*** நோயாளியை குப்புறப்படுக்கப் பண்ணி வியாதிகளுக்குட்பட்ட என்புகளுக்கிரு புறத்திலும் காரமிட்டுப் புண்ணாக்கிச் சாறுபரிலை, அயம் முதலிய மருந்துகள் கொடுத்து சரீர பெலனுண்டாக்க வேண்டும்.

***இடுப்பு விப்புருதி:-*** முள்ளந்தண்டு ரோகத்தால் இந்நோய் உண்டாகும். இதில் நோய் கொள்ளாமலும் உருவாகலாம். இவ்விற்பருதிகள் சில முதுகிலும், சில வயிற்றிலும், சில நாரியிலும் உள்ள பேசிகளின் உறை வழியாக சென்று அரைஇடுப்பில் முள்ளந்தண்டு வியாதியை உருவாக்கும்.

## முள்ளந்தண்டுக் கொடியின் அழற்சி

இவ்வழற்சியினால் சிலருக்கு சரீரம் எங்கும் விறைக்கிறது போலும், குத்துகிறது போலும், ஊருகிறது போலும் இருக்கும். சிலருக்க இடை நரம்பு வழியாக உழையும். சிலருக்கு கால்களில் வலிப்பும், நடுக்கமும் உண்டாகும். பொருத்து, மார்பு முதலிய இடங்களில் வீக்கம், நோ கொள்ளும். சிலருக்கு முட்டு, தொய்வு தலை கிறுகிறுப்பு உண்டாகும்.

### முள்ளந்தண்டுக் கொடி வாதம்:-

குளிர்காற்று, ஈரமும் சரீரத்தில் படுவதால் இந்நோய் உண்டாகும். முதுகில் நோவும், அரைக்கு கீழ் சோர்வும் உண்டாகும்.

### முள்ளந்தண்டுப்பவர்:-

கருவுண்டாகும் போது முள்ளந்தண்டிலுள்ள முட்களில் சில பிளவுபடுவதால் முள்ளந்தண்டுக்குள்ளிருக்கும் சவ்வுகள் அவைகளில் நிற்கிற நீர்த்தாகத்தினாற் பிதுங்கிப் நடுமுதுகில் மெதுமெதுப்பான கழலை தோன்றும். இது பெரும்பாலும் உருண்டை வடிவமாயிருக்கும்.

### முள்ளந்தண்டுப்புற்று:-

முள்ளந்தண்டில் கொடூரமான உபாதையும், அற்ப வீக்கமும் கொண்டு அதன் செயல்கள் பேதப்பட்டிருக்கும்.

## முள்ளந்தண்டில் உருவாகும் ஊறுகள்:-

### முள்ளந்தண்டதிர்ச்சி:-

முள்ளந்தண்டடிபட விழுவதனாலும், வளைவதனாலும் அதற்குள் இருக்கும் கொடியில் ஊறுபடும். இதனால் ஊறுகண்ட இடத்திற்கு கீழ் உள்ள உறுப்புகள் சடுதியாகச் சோர்ந்து பின் படிப்படியானச் சுகப்படும். சிலருக்கு தாபிதத்தை ஏற்படுத்தி மரணமுண்டாக்கும்.

### முள்ளந்தண்டின் எலும்புப் பெயர்ச்சியும், முறிவும்:-

முள்ளந்தண்டு பொருத்து விடுவது அபூர்வம். பொருத்து விடுகிற பெரும்பாலும் கழுத்திலும், சிறுபாண்மையாக முதுகிலும்,

அரையிலும் விடும். இது குறுக்குப்பாடாய் முறியும். இதன் தாக்கம் முள்ளந்தண்டில் இருக்கும் கொடி அடைந்த ஊறுபாட்டின் பிரமாணத்திற்கு தக்கதாக இருக்கும். இந்நிலையில் சலம் போவது குறைவாகும். சலம் மணங்கொண்டு சளிநிறைந்ததாக காணப்படும். வயிறு பொருமும். மலம் வரளும். நரம்புகள் சோரும்.

***முள்ளந்தண்டில் கொடி மெதுவாதல்:-***

இக்கொடி குலுங்குவதாலும், சின்னபின்னப்படுவதாலும் பெரும்பாலும் அது நொய்மைப்படும். இது கூழ் போலவிருக்கும். தாபிததத்திற்குண்டான அடையாளங்கள் இதில் தோன்றாது.

***முள்ளந்தண்டுக் கொடியின் விரதாபிதம்:-***

இது உண்டாவது அபூர்வம். இதில் குலைப்பன், பிரமை, வலி கண்டு பின் சோர்வு உண்டாகும்.

பிரயோகம்:- முள்ளெலும்பு விலகியிருந்தால் இழுத்து அதை நிலையிலெடுத்து விடலாம். நோயாளியை படுக்க வைத்து குண்டிப்பக்கமாக அணைவைக்க வேண்டும். சலத்தை ரியூப் மூலம் வெளியகற்றவும். மலசுத்தி பண்ணிவிக்கவும். வயிற்றுப்பொருமலுக்கு கற்பூரத்தைலம் விட்டு தேய்த்து விடவும்.

## முறிவு நெரிவு நோய்க்கு மருத்துவம்

இம்மருத்துவ முறையில் யாழ்ப்பாணத்தில் இவ்வைத்திய முறையைக் கையாளும் வைத்தியர்கள் உப்யோகிக்கும் மருந்துகளே குறிப்பிடப்பட்டுள்ளது. இம்முருந்துகளை கையாள்வதற்கு மருத்துவரிடம் நின்று பழகுவதனால் பெறப்படும் அனுபவத்தை(Clinical Experience) கொண்டு கையாள்வதனால் சிறப்பான சிகிச்சையை மேற்கொள்ள முடியும்.

***1. அடிபட்ட நோ, வீக்கம், முறிவுநெரிவு முதலியவற்றுக்கு பற்று:-***

1. மஞ்சள்மாவும் நல்லெண்ணெயும் கலந்து சூடாக்கி வைத்துக் கட்டவும்.
2. மஞ்சல்மா,நல்லெண்ணெய்,கற்றாளைச்சோறு கூட்டி களியாகக்கிண்டி கட்டலாம்.

***2. முறிவுக்கு ஏற்புத்தூள்:-***

| | |
|---|---|
| இரசம் (சுத்தி செய்தது) | - 5கிராம் |
| கந்தகம்(சுத்தி செய்தது) | - 5கிராம் |
| பொரிகாரம்(சுத்தி செய்தது) | - 10கிராம் |
| இலிங்கம் (சுத்தி செய்தது) | -20கிராம் |
| கருஞ்சீரகம் | - 30கிராம் |
| வேர்க்கொம்பு | - 40கிராம் |
| காந்தம் | - 15கிராம் |

வேர்க்கொம்பை தோல் சுரண்டி சுத்தி செய்து அரைத்து வஸ்திரகாயம் செய்து சுத்தி செய்த காந்தத்துடன் அரைத்தெடுத்துக் கொண்டு இரசம் கந்தகத்தை அரைத்து மாளப்பண்ணி பின் லிங்கம் சேர்த்தரைத்து பின் பொரிகாரம் சேர்த்து அரைக்க வேண்டும். பின் காந்தம், வேர்க்கொம்பு, கருஞ்சீரகம் என்பவற்றை ஓட்டில் வறுத்து பின் இவற்றை சேர்த்தரைத்து பின் புதுச்சட்டியை அடுப்பில் ஏற்றி சட்டி நகக்கண் சூடானபின்பு இறக்கி மேற்படி சரக்கையிட்டு வறுக்க வேண்டும் இவ்வாறு 7 தடவை செய்ய வேண்டும்.

***பிரயோகம்:-*** முறிவு ஏற்பட்டவுடன் ஏற்புத்தூளை 500மில்லிகிராம் வேர்க்கொம்புத்தண்ணீரில் சேர்த்து 3 துளி தேன் சேர்த்து கொடுக்க வேண்டும்..

***பத்தியம்:*** குளிர்ந்த சாப்பாடு எதுவுமே பாவிக்க்கூடாது. குளிப்பு, முழுக்கு கூடாது. இலகுவான முறிவு 21 நாட்களின் பின்னரே பொருந்தும். ஆளுக்கு ஆள் முறிவு வேறுபடுவதால்

சிங்கி பஸ்பம், ஆமையோட்டுப்பஸ்பம்,கன்னார் போன்றவை முறிவு பொருந்துதலை விரைவு படுத்தும்.

***3. முறிவிலே வெட்டுக்காயம் இருந்தால்:-***

நாவற்பட்டை, மஞ்சள், உப்பு சேர்த்து இடித்து 3 நாள் கட்டவும். சாளியா, கரியபவளம், பெருங்காயம் சமஎடை எடுத்து

கோழிமுட்டைக்கருவிட்டு அரைத்துப் பற்றுப்போடவும். இந்த கோழிமுட்டைப்பற்று நோவை எடுப்பதிலும், நோயாளிக்கு வன்மையை ஏற்படுத்துவதற்கும் முக்கியமானது. இந்தப்பற்றை யாழ்ப்பாணவைத்தியர்கள் மிகவும் பிரதானமாக பாவிக்கிறார்கள்.

***4. ஏட்டுமுறை:-***

கொழிக்குஞ்சுச்சாறு, கத்தரிப்பிஞ்சுச்சாறு, சாராயம்,கோழிமுட்டை வெண்கரு,வேப்பெண்ணெய் சமவெடைஎடுத்து கரியபவளம், குக்கில்,சதகுப்பை இவை சமவளவு எடுத்து சாறு, எண்ணெய், மேற்படி இடித்ததூள் என்பன சேர்த்து அவற்றைக்கட்ட விரணம், வீக்கம், இரத்தக்கண்டல், நோவு என்பன தீரும்.

5. வேர்கொம்பு, வசம்பு, மிளகு சமவளவாக எடுத்து குறிஞ்சாயிலைச்சாற்றால் அரைத்து கொதிக்க வைத்து பூச மாறும்.

6. ஒத்தடமாக தென்னங்குருத்தும், மஞ்சலும்,சேர்த்திடித்து பொட்டணி செய்து நல்லெண்ணெயில் கொதிப்பித்து ஒத்தடம் கொடுக்தல்

***7. எலும்பு முறிவு பிசகுதலுக்கு:-***

நாவற்பட்டை, ஒதியம்பட்டை, எருக்கம்பூ, தூத்துமக்கொத்தான், எருக்கம்பூ, சிரட்டைக்கரி, புழுங்கல்அரிசிச்சோறு சம எடை எடுத்து கட்டவும்.

***8. சாதாரண முறிவுக்கு எண்ணெய்:-***

***1. பெரிய மஞ்சல் எண்ணெய்:***

இது வீக்கம் உண்டாகி நீர் உருவாதலைத் தடுக்கும்.

| | |
|---|---|
| ஆமணக்கு எண்ணெய் | - 700மிலீ |
| நல்லெண்ணெய் | - 700மிலீ |
| சதுரக்கள்ளி வாட்டி பிழிந்தசாறு | - 1400மிலீ |
| கொடிக்கள்ளி வாட்டி பிழிந்தசாறு | - 1400மிலீ |
| காசுக்கட்டி | - 10கிராம் |

| | |
|---|---|
| கரியபோளம் | - 10கிராம் |
| அதிமதுரம் | - 10கிராம் |
| திப்பலி | - 20கிராம் |
| இலவங்கம் | - 10கிராம் |
| வசவாசி | - 10கிராம் |
| வால்மிளகு | - 10கிராம் |
| பச்சைமஞ்சல் சாறு | - 700மிலீ |

மெழுகு பதத்தில் காய்ச்சி எடுத்தல்.

***9. பற்று:-***

| | |
|---|---|
| 1. சாராயம் | - 1/2 போத்தல் |
| 2. முட்டைவெள்ளக்கரு | - 2 (6) |
| 3. தேன் | - வேண்டியளவு |
| 4. உழுத்தம்மா | - 1 பங்கு |
| 5. ஒதியம்பட்டைத்தூள் | - 1 பங்கு |

இவற்றை அரைத்து தூள் பண்ணி சாராயம், முட்டை,தேன் சேர்த்து பசையாக்கி பின் நோயாளிக்கு பூசவும். வெயிலில் காயவிட்டு இவ்வாறு 3 தரம் செய்து பன்டேஜ் ஐ எடுத்து அதில் பசை பூசி சுற்றிக்கட்டவும் பத்து இறுகும். 15 நாட்கள் அப்படியே விடவும்.

பொதுவாக முறிவு நோவுடன் வரும் நோயாளிக்கு முதலில் நன்கு பரிசோதித்து முறிவு அல்லது விலத்தல், நோ,கண்டல், காயம் என அவதானித்து அதற்கேற்றவாறு சிகிச்சை செய்தல் வேண்டும். பொதுவாக முதலில் எண்ணெய் போட்டு உருவி விடவும். பின் எண்ணெய்ச்சீலை கட்டிவிடல் வேண்டும். இதனால் வீக்கம் வற்றி ஒரு நிலைக்கு வரும். பின்னர் புக்கை கட்டி மேலும் இலகுவான நிலைக்கு கொண்டு வந்த பின்னர் அந்நிலமையை சரிப்பண்ணி நேராக்கி ஸ்திரமான நிலைக்கு கொண்டு வந்து பத்துப் போடுவது வழமை. இத்துடன் சிகிச்சை முடிவுக்கு வரும் நிலையைப் பெறும்.

***10. முறிவு நெரிவுக்கு:-***

ஓமம், பச்சை மூங்கிற்தண்டு, சீனக்காரம், உள்ளி, திப்பலி, கருஞ்சீரகம், மிளகு, முருங்கையிலை, எலுமிச்சங்காய் வகை

சமன் எடுத்து எலுமிச்சங்காயை பொடியாக வறுத்துப் போட்டு பொட்டணி கட்டி வைத்துக் கொண்டு தேவையான பொழுது நல்லெண்ணெய் சட்டியிலூற்றி சுடவைத்து பொட்டணியை எடுத்து ஒத்தடம் கொர்டுக்கலாம்.

***11. பற்று:-***

குக்கில், சாளியா, குந்திரிக்கம், காசுகட்டி,களிப்பாக்கு, கடுக்காய், உள்ளி வகை சமன் எடுத்து முதலிற் கூறிய 4 சரக்கையும் வறுக்காமல் ஏனையவற்றைக் கருக்காமல் வறுத்து பின்னர் எல்லாவற்றையும் ஒன்றாக்கி அம்மியில் இட்டு அரைத்து பிறகு கோழிமுட்டை வெண்கரு விட்டு அரைத்து மெல்லிய சீலையிற் தடவி நோவுள்ள இடத்தில் போடவும்.

***12. முறிவுக்கு பற்று:-***

கரியபவளம், சாளியா, வெளுத்தல்பிசின்,உள்ளி, சுக்கு, குரக்கன்மா, வேப்பம்பிசின், முட்டைவெண்கரு முதலில் குரக்கன்மாவை சுடுதண்ணீரில் காய்ச்சவும். கரியபவளம் முதல் சுக்கு ஈறாகவுள்ள சரக்குகளை தூள் செய்து பின்னர் குரக்கனமாவில் அதையிட்டு கிண்ட வேண்டும். அதன் பின் வேப்பம்பிசினை சுடுநீரில் கரைத்து அதனுள் இடவும். பற்று பூசக்கூடிய பதம் வந்ததும் முட்டை வெண்கருவை அதனுடன் சேர்த்துக்கிண்டி ஒரு வெள்ளைச்சீலை யில் பூசி பத்தாக போட வேண்டும். புண் மாற தானாக உதிரும்.

முழங்கை நீட்ட முடியாவிடின் மாவிலங்கையிலை, நத்தைச்சூரியிலை வதக்கிக் கட்டவும்.

***13. முறிவிற்கு உருக்கு மருந்து:-*** நறுவிலிப்பட்டை(அல்லது இலை), மாவிலங்கம்பட்டை(அல்லதுஇலை), முருங்கைப்பட்டை, நத்தைச்சூரிவேர்,கவிழ்தும்பை, பச்சைமஞ்சல் 1பிடி கடுகு அம்மியில் அரைத்து 3மேசைக்கரண்டி பசையாக அரைத்து எடுத்து எடுத்துப் நீரில் கொதிக்க வைத்து பிசைந்து முறிவு ஏற்பட்ட இடத்தில் அணைத்து மூங்கில் சீவி வைத்துக் கட்டவும். 45 நிமிடங்களில் (சாறு எரியத்தொடங்கிய பின்) அவிழ்த்து

விட்டு நீரால் கழுவவும். நாள்பட்ட நோவுக்கு வைத்துக்கட்ட நோவைப் புதுப்பிக்கும். பின் சிகிச்சையைத் தொடரலாம்.

### *14. முறிந்த இடத்தில் இறுக்கத்தை இளக்கி நீட்டி மடக்க:-*

சாத்தாவாரி, குன்றிக்கொடி, பூவரசம்பட்டை,தேங்காய்ப்பூ எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து இடித்து பிழிந்து சீலையால் வடித்து எடுத்து அதை கறல் இரும்புச்சட்டியில் இட்டுக் கொதிக்க வைத்து எண்ணெய் பிறக்கும் போது எடுத்துப்பூசி உருவவும்.

***15. மதுயஷ்டத்தைலம்:-*** பசுநெய், நல்லெண்ணெய் அதிமதுரக்கஷாயம், பிரண்டைத்துளிர், தூத்துமக்கொத்தான் அளவுப்பிரமானத்தை தீர்மானித்து போடவும்.

### *16. வீக்கம் நோ மாறுவதற்கு:-*

காவிளாயிலைச்சாறு, குன்றிமணியிலைச்சாறு, குரக்கன்மா கூட்டி குழம்பாகக் காய்ச்சி பூசவும்.

### *17. நோவுக்குபத்து:-*

பாலைப்பட்டை. ஒதியம்பட்டை, வேப்பம்பட்டை, நாவற்பட்டை சம எடை எடுத்து 1/4 அவித்து பிழிந்த நீரில் வேப்பம்பிசின், விளாம்பிசின், ஒதியம்பிசின் கூட்டியவித்து உள்ளி,உலுவா,கடுகு, சாளியா,கொடும்புளி, வெளுத்தற்பிசின், சுக்கு, கருங்கறையான்மண் வகை 10கிராம் மஞ்சல்மா, குரக்கன்மா எடுத்து மேற்படி நீர்விட்டு கலக்கி காய்ச்சிக் குழம்பு பருவதத்தில் கோழிமுட்டைவெண்கரு விட்டு அம்மியிலரைத்து பசையாக வரும் பதத்தில் எடுத்து சீலையில் பூசிப் பத்திட தீராத நோ, பழம்நோக்கள் தீரும்.

### *18 முறிவு எண்ணெய்:-*

கடுக்காய், கரியபவளம், வசம்பு, மஞ்சல், தக்கேலம், வேப்பம்பிசின், பாற்சொத்தியிலை, சுக்கு ஆமணக்கு எண்ணெய், நல்லெண்ணெய், தேங்காய்எண்ணெய் குறிப்பிட்ட பிரமாணம் எடுத்து காய்ச்சி எடுக்க.

***19 சாராயஎண்ணெய்:-***

1. காசுக்கட்டி - 1.25கிராம்
2. கரியபவளம் - 1.25கிராம்
3. திப்பலி - 1.25கிராம்
4. அதிமதுரம் - 10கிராம்
5. வசவாசி - 10கிராம்
6. ஏலம் - 10கிராம்
7. இலவங்கம் - 10கிராம்
8. நல்லெண்ணெய் - 1.4லீற்றர்
9. சாராயம் - 1.4லீற்றர் மெழுகு பதத்தில்

இறக்கவும். உடன்புண்ணிற்கும், பீறுகாயத்திற்கும் உதவும். சிலபேருக்கு உடல்வாசியாக சீழ் உண்டாகும். பழம்சீலை சுத்தி வெள்ளிக்கம்பி பூசி பின் ஒடு எண்ணெய் போடவும்.

***20. ஒடு எண்ணெய்:-***

01. முள்முருக்கு
02. புங்கு
03. இயங்கு
04. புளியமிலை
05. தேங்காய் எண்ணெய் வகை 1.4லீற்றர்
06. காயம்
07. கைப்பு
08. களிப்பாக்கு
09. வேம்பாடல்
10. துத்தம்
11. துரிசு
12. கிருமிசத்துரு
13. இரசம்
14. சீனக்காரம் வகை 10கிராம் எடுத்து மெழுகுப் பதத்தில் வடிக்கவும். புரையோடும் புண்களுக்கு உகந்தது.

பூட்டுக்கள் விலகினால் அதை கவனியாது விட்டால் கைசுகால், முழங்கால், முழங்கை மூட்டுக்கள் இறுகி விடும். அதனால் அதில் உள்ள கல்சியப்படிவை (சுண்ணம்பு) கரைக்க

### *21. சிங்கித்தைலம்:-*

1. வில்வம் வைரம் - 450கிராம்
2. மஞ்சல்சாறு - 1.4லீற்றர்
3. சமுத்திரபச்சை - 450கிராம் (வங்காளபச்சை)
4. காவிளாய்வேர் - 450கிராம்
5. கற்கடகசிங்கி - 80கிராம் வில்வவைரத்தை குடிநீரிட்டு எடுத்து, மற்றவற்றை இடித்து அரித்து எடுத்து
6. தேங்காய்எண்ணெய் - 1.4லீற்றர்
7. ஆமணக்குஎண்ணெய் -1.4லீற்றர் சேர்த்துக்காய்ச்சி மெழுகு பதத்தில் எடுக்கவும். வீக்கம், பிடிப்பு, வசையாமை, நாரிப்பிடிப்பு, காதுக்குத்து (வெற்றிலையில் விட்டு சூடாக்கி விடல்)

முறிந்து நோய் வாய்ப்பட்டவர்களுக்கு உடல்பலவீனத்தை தணிப்பதற்கும், புஷ்டியைக் கொடுக்கவும்

### *22. வாலை லேகியம் :-*

01. அதிமதுரம்
02. ஏலம்
03. இலவங்கம்
04. கோட்டம்
05. சாதிக்காய்
06. கராம்பு
07. சுக்கு
08. மதனகாமப்பூ
09. கசகசா
10. ஓமம்
11. அபின் வகை 2.5கிராம்
12. பயறு
13. உழுந்து வகை 40கிராம்
14. நிலப்பனை
15. சாரணை

16. சீந்தில்
17. கஞ்சா வகை- 20கிராம்
18. சாத்தாவாரிச்சாறு - 700மிலீ
19. சாம்பல் மொந்தன் வாழைச்சாறு- 700மிலீ
20. பனைவெல்லம்
21. கற்கண்டு
23. சீனி வகை 20கிராம்
24. நெய்
25. தேன் வகை 700மிலீ

முறைப்படி லேகியம் கிண்டி இலந்தைப்பழ பிரமாணம் காலை,மாலை உண்ணவேண்டும்.

சிங்கித்தைலம் பூசி முள்முருக்கமிலை வாட்டி போட்டு முறிந்த இடத்தில் கண்டல், மூட்டுவிலகலால் ஏற்படும் கரப்பான் நீருக்கு

***23. கரப்பான் குடிநீர்:-***

1. கடுக்காய் - 10கிராம்
2. கடுகுரோகினி - 10கிராம்
3. கற்றாளம்சருகு - 10கிராம்
4. கருஞ்சீரகம் - 10கிராம்
5. கறுத்தப்பூக்கொடி - 10கிராம்
6. இயங்கம்துளிர் - 10கிராம்
7. வவ்விலொட்டி - 10கிராம் முறைப்படி குடிநீரிட்டு கொடுத்தல்.

முறிவு ஏற்பட்டு 21 நாட்களின் பின் வைரப்பத்துப் போடல்

***24. முறிவுக்கு வைரப்பத்து:-***

1சுண்டு சீனட்டி சம்பா அல்லது மொட்டைக்கறுப்பன் தவிடு நீக்கி நன்றாக அவித்து அரைத்தல். சிரட்டைக்கரி 100கிராம,மஞ்சல்தூள் 1மேசைக்கரண்டி நன்றாக அம்மியில் அரைத்து சிரட்டைகரியும் சேர்த்து அரைத்து மஞ்சல் தூளையும் போட்டு பசையாக அரைத்து எடுத்து முட்டைவெண்கரு விட்டு

கலந்து அரைத்தல். அதை மெல்லிய பருத்தித்துணியில் (காரிக்கன்துணியில்) இருபுறமும் பூசி காயவிட்டு காய விட்டு பத்துப் போட வேண்டும். 3 மணித்தியாலத்தினுள் செய்து போடல் வேண்டும். கொப்புளம் ஏற்படுமாயின் மட்டையை சிறிது விலத்தி கொப்புளத்தை உடைத்து கரப்பான் தைலம் இடல் வேண்டும்

முறிந்து நாட்செல்லவரின் முதலில் வீக்கத்தை வற்ற வைத்து பின் அதைச் சரி செய்தல் வேண்டும். பிழையாக முறிவு பொருந்தின் அதை உருக்கி மருந்து போட்டு இளகிய பின் மீண்டும் சரி செய்தல் வேண்டும்.

### *25. நோவுக்கு புக்கை:-*

1. பச்சையரிசி - 1சுண்டு
2. மஞ்சல்தூள் - 100கிராம்
3. சிரட்டைக்கரி - 100கிராம்
4. தூத்துமக்கொத்தான் சாறு - 350மிலீ
5. செத்தல்தேங்காய் 1/2 பால் அரிசியை நன்றாக வேக வைத்து மேற்கூறிய சரக்குகள் சோத்து கிண்ட எண்ணெய் பிறக்கும் பதத்தில் பெரிய மஞ்சல் எண்ணெய் சேர்த்து திரண்டு வரும் பதத்தில் பொட்டணி கட்டி ஒத்தடம் பிடித்தால் இது 30 பேருக்கு பிடிக்கலாம். கண்டல் இருந்தால் சூட்டுடன் பிடிக்கக்கூடாது. முதலில் சிங்கித்தைலம் போட்டு பின் 3ஆம் நாள் வேதனைக்கு ஒற்றடம் பிடிக்கலாம்.

முறிவு மாறிய பின் வீக்கம், வேதனை காணப்பட்டால் பெரிய பறங்கிக்கிழங்கு சூரணம் கொடுக்கலாம்

### *26.பெரிய பறங்கிக்கிழங்கு சூரணம்:-*

1. கடுகுரோகினி
2. கறுவா
3. அதிமதுரம்
4. கைப்பு
5. கோட்டம்
6. இருசீரகம்
7. சாதிக்காய்
8. தேவதாரு
9. குறோசாணிஓமம்
10. நெல்லிவற்றல்
11. அதிவிடயம்
12. மிளகு

13. சாளியா
14. பொன்னரிதாரம் (சு)
15. வெட்பாலை
16. இந்துப்பு
17. ஏலம்
18. பொரிகாரம்
19. காயம்
20. கல்நார்
21. கடுக்காய்
22. கல்மதம்
23. உலுவா
24. துத்தம்
25. தான்றிக்காய்
26. துரிசு(சு)
27. கச்சேலம்
28. சாதிலிங்கம்(சு)
29. செவ்வள்ளி
30. சீனக்காரம்(சு)
31. சுக்கு
32. அகில்
33. மல்லி
34. ஓமம்
35. திப்பலி வகை 5கிராம்
36. நன்னாரி
37. இயங்கம்வேர் வகை 30கிராம்
38. பறங்கிக்கிழங்கு (சுத்தி) 200கிராம் சூரணித்து சகல வாதங்களுக்கும் கொடுத்தல்

காயத்தால் ஏற்படும் முறிவுக்கு

### *27. பிரண்டிக்குழம்பு:-*

1. சாதிக்காய்
2. தான்றிக்காய்
3. சித்தரத்தை
4. மல்லி
5. அதிவிடையம்
6. வெந்தயம்
7. ஏலம்
8. நாகம்பூ
9. குறேசாணிஓமம்
10. இந்துப்பு
11. வசுவாசி
12. பெருங்காயம்
13. கோட்டம்
14. வால்மிளகு
15. செவ்வள்ளி
16. மதுரம்
17. காந்தம்
18. கசகசா
19. கராம்பு
20. கராம்பு
21. சுக்கு
22. கடுகு
23. இலவங்கம்
24. கறுவா

25. உள்ளி 26. நற்சீரகம்
27. கடுக்காய் 28. திப்பலிமூலம்
29. சாதிலிங்கம் 30. அபின்
31. அரிதாரம் 32. மனோசிலை வகைக்கு 2.5கிராம்
33. குங்குமப்பூ - 1.25கிராம்
34. மதனகாமியபூ- 1.25 கிராம்
35. சுக்கு - 12.5கிராம்
36. சீனக்கிழங்கு - 12.5கிராம்

மேற்படி சரக்குகளை சூரணித்து அபினையும் சேர்த்து வைத்து வாயகன்ற போத்தலில் மேற்படி தூளையும் பிரண்டியையும் போட்டு சிலை மண் செய்து மணலில் தாட்டு புளியம் பொருக்கு (எருவறாட்டியில்) கோழிப்புடம் போட்டு எடுக்கவும்.

பிரமாணம்:- 1 தேக்கரண்டி காலை,மாலை
தீரும் ரோகம்:- கெர்ப்பபையில் ஏற்படும் சகலரோகங்களும் தீரும்.

### *28. நோவுக்கு ஒற்றடம்:-*

பெருமருந்து, நொச்சி, கான்றை, இயங்கு, மாவிலங்கம்பட்டை, உத்தமாகாணி, எருக்கு, வாதமடக்கி, வெள்ளறுகு இவை வேர் வகை- 1பிடி, அமுக்கிரா,பறங்கிக்கிழங்கு, நிலப்பனை, பிரப்பங்கிழங்கு, சிவனார்வேம்பு, கான்றை, நொச்சி, வாதமடக்கி இவை கற்கம் 1 பிடி திரிகடுகு, கடுகு,உள்ளி, காயம், கரியபவளம், சானியா, கற்பூரம், சாம்பிராணி, வெளுத்தல்பிசின் இவை சரக்குவகை-5கிராம் சாராயம் விட்டு இடித்து பொட்டளி கட்டி அவித்து வேப்பெண்ணெயில் தோய்த்து ஒற்றடம் கொடுக்கவும்.

### *29. நோவெண்ணெய்:-*

வில்வம்பட்டை,பஞ்சபாண்டவர் முல்லை, காவிளாய், நல்லெண்ணெய்,வேப்பெண்ணெய், இலுப்பைஎண்ணெய் வகை

350மிலீ, பூமத்தம்இலைச்சாறு, தூத்துமக்கொத்தான்சாறு, பச்சைமஞ்சட்சாறு வகை- 350மிலீ கற்கடகசிங்கி, சமுத்திரபச்சை, இந்துப்பு, கடுகு, வேம்பாடல், இலவங்கம், சாளியா, கற்பூரம், பெருங்காயம்- வகை 5கிராம் சேர்த்து காய்ச்சி மெழுகு பதத்தில் இறக்கவும்.

***30. சிரட்டைத்தைலம்:-*** தேங்காய் சிரட்டை 600 எடுத்து உரலிலிட்டு சிறுதண்டுகளாக இடித்து அதை ஒரு பானையிலிட்டு கோடாங்கல்லு (கீரிமலை கல்) தூளாக்கி அதையும் போட்டு விரல் தடிப்புள்ள வேப்பங்குச்சி கொண்டு பானையை அடைக்கவும். 5மூடு சட்டியினடியில் 5 துவாரங்கள் இடவும். பொருத்துக்குச் 7 சீலைமண் வெய்யவும். துவாரமிட்ட சட்டியின் துவாரங்கள் உட்பொருந்தும்படி இன்னொரு சட்டியை பொருத்த வைக்கவும். வாலுகாதேவி அடுப்பில் வைத்து எரித்து 3 மணித்தியாலங்களுக்கு காடாக்கினியாக எரித்து 1000தென்னம்மட்டைகள் பாவித்து எரிக்கவும். எண்ணெய் சொற்பமாக கீழுள்ள சட்டியில் வடியும். முதல் வடிவது தவிர்த்து பின்னர் தார் மாதிரி தடிப்பாக வடியும் தைலத்தை எடுக்கவும். இதை கண்டல்களுக்கு பூசவும். 45 நிமிடங்களில் காய்ந்த பின் சிங்கித்தைலம் பூசி முருக்கம் இலையை வாட்டிக்கட்டவும். 12 மணித்தியாலத்திற்கு ஒரு தடவை மாற்றிக் கட்டவும்.

### *31. முறிவிற்கு எண்ணெய் ( கஸ்தூரியார் முத்துக்குமாரு ஏட்டுப்பிரதி) :-*

1. இலுப்பை எண்ணெய் - 700மிலீ
2. எலுமிச்சம்சாறு - 700மிலீ
3 .உத்தமாணிச்சாறு - 700மிலீ
4. கடுகு
5. மஞ்சல்
6. வெளுத்தல்
7. வெந்தயம்
8. பெருங்காயம்

9. சாளியா
10 கரியபவளம்
11. பெருஞ்சீரகம்
12. கருஞ்சீரகம்
13. திப்பலி
14. சுக்கு
15. அமுக்கிரா வகை 10 கிராம்
16. ஆடாதோடைச்சாறு - 700மிலீ
17. சாரயம் - 350மிலீ
18. கற்பூரம் - 20கிராம் முறைப்படி தைலம் வடித்துக் கொள்ளவும்.

### *32. சரசபாதித்தைலம்*

1. கடுகுஎண்ணெய் - 700மிலீ
2. நல்லெண்ணெய் - 700மிலீ
3. கற்பூரம் - 30கிராம்
4. தேப்பந்தைலம் - 700மிலீ

கடுகுஎண்ணெயில் கற்பூரத்தையிட்டு வெயிலில் வைக்கவும். நன்கு கரையும். கரைந்த சமயத்தில் தேப்பந்தைலம், நல்லெண்ணெய் அதனுடன் சேர்த்து கலக்கி வைத்தல்.

### *33. புக்கை:*

வீக்கமற்ற நிலையில் பயன்படுத்துவது.
மஞ்சள்,உழுந்து, திணை,சாமை,சாளியா,வேர்கொம்பு,உள்ளி, சிவத்தஅரிசி உள்ளி தவிர ஏனையதை சமவெடை எடுத்து நன்கு அரைத்து சிறுசட்டியில் போதுமான நீர்விட்டு கொதிக்கும் நேரம் இச்சரக்குகளுடன் சில உள்ளிப்பற்கள் போட்டு அரைத்து கழிப்பதம் வந்ததும் எடுத்துப் பயன்படுத்துதல்.
வீக்கமுள்ள நிலையில் மேற்படி சரக்குகளுடன் மேலதிகமாக வீக்கத்தினை குறைக்கும் சரக்கான கரியபவளம், பேதியுப்பு என்பன சமவளவில் சேர்க்கப்படுகிறது.

பரம்பரை வைத்தியர் சி.பவளேந்திரன் (புத்தூர்சந்தி மீசாலை அவர்களிடமிருந்து பெற்றுத்தந்தவர். இறுதி வருட மாணவன் V.சிவகுநேந்திரா அவர்கள்)

### *34. நோவுக்கு ஒத்தடம்:*

இலை வகை- நொச்சி, ஆமணக்கு, ஆடாதோடை, மாவிலங்கு,வாதமடக்கி, பருத்தி, விராலி, குப்பைமேனி,முடக்கொத்தான், உத்தமாகாணி, அடம்பு, ஆவரசு, முடிதும்பை, மூக்கறைச்சி, வேம்பு.விடத்தல்,பொருத்துமான், குண்டுமணி, பூமத்தை, சூரை,காண்டை, புல்லாந்தி, சாறணை அமுக்கராய் வகைக்கு -100 கிராம்

மாவகை: அரிசிமா.5கிகி, குரக்கன்மா.1கிகி, உழுத்தம்மா.1கிகி, ஒடியல்மா 1கிகி, சாமிமா.1கிகி, திணைமா.1கிகி, வேர்க்கொம்புமா.250கி, மஞ்சல்மா.1கிகி, நற்சீரகம்.1கிகி, வெந்தயமா.1கிகி,

சரக்குவகை:- கரியபவளம்.50கி, சாளியா.25கி, வெளுத்தல் பிசின்,குங்கிலியம்,சாம்பிராணி,காசக்கட்டி, களிப் பாக்கு, வாய்விடங்கம்,

பூனைக்களற்சி, பறங்கி வகை. 25கி

பட்டைவகை: அத்தி, இத்தி, ஆல், அரசு,புங்கு.புன்னை, பாலை, இலுப்பை, புல்லாந்தி, கருவேலன்,மாவிலங்கு, நாவல், ஒதி, புளி, கொண்டல், வேம்பு, ஆயில், எலும்பருக்கி வகை 100கி

இலை, பட்டை வகைகளை பச்சையாகவோ இடித்தோ அல்லது காய வைத்து மாவாக்கி மாவகைகளையும், சரக்கு வகைகளையும் அரைத்து ஒன்றாக சேர்த்து இலைக்கசாயத்துடன் சேர்த்துக் காய்ச்சி ஒத்தணம் கொடுத்து நோவுள்ள இடத்திற்கு கட்டலாம்.

### பத்து:

பாலைப்பட்டையை இடித்து நீர்விட்டு காய்ச்சி பிழிந்த சாறு எடுத்து நெருப்பில் காய்ச்சி வற்றி வரும் போது கரியபவளம், பெருங்காயம்(1கிராம்), பனங்கட்டி, உள்ளி250கிராம் பாலைப்பாணியுடன் சேர்த்துக்காய்ச்சி பதமாக எடுக்க வேண்டும். அதன் பின்னர் அளவாக பச்சைக்கற்பூரம், விளைவு சூடம்,

சாராயம், தேன் என்பன சேர்க்க வேண்டும். இவ்வாறு தயாரிக்கப்பட்ட பற்றானது எலும்பில் வெடிப்பு உள்ளது எனஅடையாளப்படுத்தப்படும் போது கட்டப்படுகின்றது. இவ்வாறு 2-3 தடவை கட்டப்பட்ட பற்றிற்கும் குணமாகவில்லை எனில் பற்றினை மாற்றிக் கட்ட வேண்டும்.

முட்டைப்பற்று:

கருங்கற்புற்றுமண் தேவைக்கேற்ப

குரக்கன்- 50கிராம்

முட்டைவெள்ளைக்கரு-1

உள்ளி- 5 பற்கள்

மஞ்சல் - 50 கிராம்

பெருங்காயம் -1 துண்டு

சாளியா- 50 கிராம்

சாம்பிராணி - 50 கிராம்

கற்பூரம் - 50 கிராம்

உழுத்தம்மா - 50 கிராம்

கருஞ்சீரகம்- 50 கிராம்

தேன் - 1 அவுண்ஸ்

சாராயம் - 50- 100மிலீ

சாராயம் தவிர்ந்த ஏனைய சரக்குகள் நன்றாக அம்மியில் பசை போல் அரைத்து சாராயத்தினையும் கலந்து பூச வேண்டும். வீக்கம் அதிகமாயிருப்பின் கரியபவளம், பேதியுப்பு என்பன மேலதிகமாக சேர்க்க வேண்டும்.

நோவு எண்ணெய்:

கைப்பு, அரத்தை, சமூத்திரப்பழம்,இலவங்கம்,வெட்டி,கறுவா, குத்துக்கால் சம்மட்டி, கராம்புதுடரி,வால்மிளகு, செங்கத்தாரி, திப்பலி, நொச்சி, வசம்பு,ஆடாதோடை,பெருங்காயம், பெருமருந்து, கருஞ்சீரகம், கொடிவேலி, நற்சீரகம்,கோட்டம், அதிவிடையம், களிப்பாக்கு, கார்போகவரிசி, தேவதாரம், அன்னபேதி,

பூதவிருக்கம்,குரோசாணி, செங்சந்தணம், சாம்பிராணி, நற்சந்தணம், சடாமாஞ்சில், கற்கடகசிங்கி, ஏலம்,இலாமிச்சு, சிவனார்வேம்பு, அமுக்கிரா, சிவகரந்தை, பறங்கி, கரியபவளம், சாறணை, சாளியா, வேர்க்கொம்பு, வெளுத்தல்பிசின், இயங்கு, வேம்பாடல், சித்தரத்தை, செவ்வள்ளி, பேரரத்தை,வெள்ளைக் குங்கிலியம், சிற்றாமட்டி,கல்நார், கல்மதம், புங்கம்வேர் கல்மிரிசு, எருக்கலைவேர்,சதகுப்பை,நத்தைச்சூரிவேர், வாலுளுவை, வெண்கடுகு, மரமஞ்சல், செங்கடுகு, கஸ்தூரி மஞ்சல், சாதிக்காய்,குழவிந்தமஞ்சல்,தாண்றிக்காய், பச்சைமஞ்சல், நீர்முள்ளி,நீர்முள்ளிவிதை, நிலவேம்பு. நிலப்பனைக்கிழங்கு, நன்னாரிவேர் 5கிராம் வீதம் மேற்கூறிய சரக்குகளைச் சேர்த்து இடித்து மாவாக்கி 2 போத்தல் நல்லெண்ணெய், 1 போத்தல் இலுப்பெண்ணெய், 1 போத்தல் ஆமணக்கு எண்ணெய். 1போத்தல் புங்கெண்ணெய் விட்டு 1 நாள் ஊறவிட்டு அடுப்பில் வைத்து அரைத்த மூலிகைச் சரக்கு வறளும்வரை காய்ச்சி அடுப்பிலிருந்து இறக்கி வைத்து ெண்ணெய்க்குள் சேர்த்து பாவிக்கலாம்.

**குறிப்பு:-** பொதுவாக சித்த வைத்தியத்தில் முரிவுநெரிவுக்கு பாவிக்கப்படும் மருந்துகளில் மஞ்சல் எனும் மூலிகை பிரதான பங்கு வகிக்கிறது. இந்த மருந்துகள் பல ஆண்டுகளுக்கு முன்னர் சித்தர்களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. தற்போது அமெரிக்காவில் உள்ள அரிசேனா பல்கலைக்கழகத்தின் மருத்துவக்கல்லூரியைச் சேர்ந்த ஜேனட் பங்க் என்பவரின் ஆராய்ச்சியில் எலும்புகளின் சிதைவவைத் தடுப்பதன் மூலம் மூட்டுக்களில் ஏற்படும் பாதிப்பை மஞ்சல் தடுப்பதாக அறியப்பட்டுள்ளது. கூடுதலாக மாதவிலக்கு நின்ற பெண்களுக்கு எலும்பில் ஏற்படும் தாபிதத்திற்கு சிறந்த நிவாரணி மஞ்சல் எனவும் அறியப்பட்டுள்ளது.

பின்னிணைப்பு-

நோயாளியில் எடுக்கப்பட்ட கதிர் வீச்சுப்படம்.



படம்: 1: 8 வயதுப்பிள்ளையின் புயவென்பு (Femur bone) முறிவடைந்த நிலையைக் காட்டுகிறது. பின் 3 கிழமையின் பின்னர் முறிவு சேர்வதை (Callus formation) 3 மாதத்தில் பூரணமாக சேர்ந்திருப்பதையும் படத்தில் காணலாம்.



Fig. 2 Radiographs of typical greenstick fractures in children.



Fig:- 3: Fatigue or stress fracture of the 2nd metatarsal bone



A- Fatigue fracture of lower end of tibia B- Healing fatighe fracture of lower and flbula



Fig-5: Pathalogical fracture 2- Fracture of the radius bone.
3- Fracture of the site of carcinomatous metastasis in t the upper half of the femaral shaft.



Fig-6 Pathalogical fracture from carcinomatasis near upper end of humarus.



Fig: -7: Radiological creteria of union



Fig- 8: Fracture of the clavicle - Unisplaced fracture of a phalanux of a finger.



Fig- 9: Fracture of the scaphoid bone - Fracture of the neck of the femur



Fig- 10: Shws delayed union ulna fracture.



Fig-11: Anterior dislocation of the shouler



Fig- 12 Fracture of the neck of the humerus



Fig- 13: Fracture of the shaft of the humerus





Fig- 14: Postero- lateral dislocation of the elbow

## *உசாவியவை:*


கையெழுத்துப்பிரதி. வைத்தியர் பெயர் தெரியவில்லை. கிடைக்கப்பெற்ற இடம் கடுக்காய் லேன், நாயன்மார்கட்டு

கையெழுத்துப்பிரதி காலஞ்சென்ற இ.உமாகாந்தன் நாயன்மார்கட்டு முறிவு நெரிவு வைத்தியசாலை, நாயன்மார்கட்டு.

கையெழுத்துப்பிரதி கஸ்தூரி முத்துக்குமாரு வைத்தியர், பார்வையிட்டஇடம் மருத்திஞ்செயம் நாவற்குழி

துரைஸ்வாமி.மே. மாதவ நிதாநம் எனும் ரோகவிநிச்சயம் 1936 மெட்ராஸ்

முறிவுநெரிவு சம்பந்தமாக நாடோடிக்கதைகள் யாழ்ப்பாணம்.

John Crawford Adams, David Hamblen Out line of fracture Sydney Toronto . 1999.

## ஆசிரியரின் வெளியீடுகள்

1. விஷவைத்தியம்

2. பரம்பரை மருத்துவம் பாகம் - I
(பொது மருத்துவம்)

3. பரம்பரை மருத்துவம் பாகம் - II
(சித்த மருத்துவ சத்திர சிகிச்சை முறைகள்)

4. பரம்பரை மருத்துவம் பாகம் - III
(முறிவு நெரிவு மருத்துவம்)


தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:-
58, கே.கே.எஸ் வீதி, கொக்குவில்
தொலைபேசி இலக்கம்:- 021-222 2537



## ஆசிரியர் பற்றி அறிந்து கொள்ளச் சில வார்த்தைகள்.....

யாழ் தீபகற்பத்தில் சிறப்புற்று விளங்கும் புங்குடுதீவில்

**டாக்டர் சி. கணேஷ்**

(புங்குடுதீவு மக்களால் நன்கு அறியப்பட்ட பெயர்)

**தம்பதிகளின் கனிஷ்ட புத்திரன்**

இவர் தனது ஆரம்ப கல்வியை புங்குடுதீவு ஸ்ரீ.சண்முகநாதன் வித்தியாலயத்திலும.க் இடைநிலைக் கல்வியை யாழ். இந்துக்கல்லூரியிலும் பூரணப்படுத்தி பின் உயர் கல்விக்காக தனது தந்தையாரின் வழியில் சிறப்புடன் மேற்கொண்ட வைத்தியத் தொழில் பால்ஈர்க்கப்பட்டு தனது ஆசிரியத்தொழிலைத் துறந்து யாழ் பல்கலைக்கழகத்தின் ஓர் அங்கமாகிய சித்தமருத்துவத் துறையில் இணைந்து திறமையுடனும், ஈடுபாட்டுடனும் கற்றுத்தேர்ந்து B.S.M.S. பட்டதாரியானார். தொடர் ஊக்கம் காரணமாக முதுகலைமாணி பட்டப்பின் படிப்பையும் (M.Phil) இதே பல்கலைக்கழகத்தில் பூர்த்தி செய்தவர் ஆவார். இவ் முதுகலைமாணிப் பட்டப்பின் படிப்பானது குறிப்பிட்ட ஒருசிலராலேயே. காரண காரிய நிமித்தமாக மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஆனால் எதுவித குறிப்பிட்ட சுய நன்மையும் இன்றி துறைசார் உத்வேகத்துடன் இதனை மேற்கொண்டு வெற்றி பெற்றவராவார். இது மட்டுமன்றி உள்நாட்டு சர்வதேச கருத்தரங்குகளில் பங்கு பற்றி சித்தமருத்துவ ஆய்வுக்கட்டுரைகளை வாசித்துள்ளார். இவ்வாறு பெற்றுக்கொண்ட விடயங்களையும் தான் தேடியறிந்தவற்றையும் ஏனையவர்களும் அறிந்து பயன்பெறும் வகையில் புத்தக வெளியீட்டை ஆரம்பித்து குறுகிய காலப்பகுதியில் தனது நான்காவது புத்தகத்தை வெளியிடுவதையொட்டி மிகவும் மகிழ்வடைவதுடன் அவர் தனது முயற்சியை மேலும் அதிகப்படுத்தி மேலும் மேலும் பல புதிய தேவைப்பாடுள்ள விடயங்களை செய்து முடிக்க வேண்டும் என வாழ்த்துகிறேன்.

07.05.2010

**வைத்தியகலாநிதி த. சத்தியசீலன்**
ஆயுர்வேத மருத்துவர்
சித்த போதனா வைத்தியசாலை,
கைதடி.